
பற்களைப் பற்றிய ஒரு பெரிய உண்மை
வாய் துர்நாற்றம் என்பது பற்களைவிட அதிகம், ஈறுகள் சம்பந்தப்பட்டதாகும்.
மற்றுமொரு பெரிய உண்மை
போர்ஹென்ஸ் டூத்பேஸ்ட்டில் உள்ள ஒப்பற்ற அஸ்ட்ரிஞ்ஜெண்ட் மட்டுமே ஈறுகளை வலுவாக்கி அவற்றை ஆரோக்கியமாக வைக்கிறது. அதனால் வாய் துர்நாற்றம் ஏற்பட வாய்ப்பே இல்லை.
நுரை வளமுள்ள போர்ஹென்ஸ் —நீல நிறப் பேக்கிலே.
Forhan's
Forhan's
கட்டுப்படுத்தப்பட்ட நுரையுள்ள —ஆரஞ்சு பேக்கிலே.
போர்ஹென்ஸ் பராமரிப்பு
32 என்றும் பத்திரம்
ஒரு பல் டாக்டரால் உருவாக்கப்பட்ட டூத்பேஸ்ட்.

GM.27/88.Tm

# இலவச இணைப்புகள்!

## அமரர் கல்கி எழுதிய அற்புதமான

## ஆறு குறு நாவல்கள்!



ஒற்றை ரோஜா



அமர வாழ்வு



பொங்குமாங்கடல்



காதறாக்கள்ளன்.



மாடத்தேவன் சுனை



ஜமீந்தார் மகன்

ஆகஸ்ட் 7' ஆண்டு மலரிலிருந்து

**கல்கி** வழங்குகிறது

# போஃபோர்ஸ் ஊழலைத் தகர்க்கும் ஹிந்து பீரங்கி!

## — என். ராம் பேட்டி

**போ**ஃபோர்ஸ் ஊழல் எத்தனை பிரபலமாகிவிட்டதோ, அத்தனைக்கு 'ஹிந்து' இணை ஆசிரியர் என். ராமும், அதன் ஜெனீவா நிருபர் சித்ரா சுப்பிரமணியமும் வீட்டுக்கு வீடு பேசப்படும் பெயர்களாகிவிட்டனர்!

துப்பறியும் நிபுணர்களின் துணிச்சலோடு, மறைக்கப்பட்ட செய்திகளை மக்கள் முன் வழங்கும், இன்வெஸ்டிகேடிவ் ஜர்னலிஸத்தில் ஈடுபட்டு, ஒரு பரபரப்பை ஏற்படுத்தினாலும் ஹிந்து, தன் வழக்கப்படி செய்திகளையும் ஆவணங்களையும் ஒன்றுக்குப் பத்துத் தடவை சரி பார்த்தே வெளியிட்டு வருகிறது. 'இந்த ஆள் இன்னும் என்னென்ன வைத்திருக்கிறாரோ?' என்று அரசே நடுங்கும் அளவுக்கு ஹிந்து 'ராம்' இப்போது விசுவரூபம் எடுத்து நிற்கிறார்.

அவருடன் நடத்திய பேட்டியின் முக்கிய பகுதிகள் :

- ***நீங்கள் இத்தனை ஆவணங்களை வெளியிட்டீர்களே, இவற்றிலிருந்து என்ன முடிவுகளுக்கு நீங்கள் வருகிறீர்கள்? உங்கள் அபிப்பிராயங்களைத் தொகுத்துக் கூறுங்களேன்....?***

முதல் விஷயம் போஃபோர்ஸ் நிறுவனம் பொய் சொல்லியிருக்கிறது. இந்திய அரசிடமும், கூட்டுப் பார்லிமெண்டரி கமிட்டியிடமும், ஸ்வீடிஷ் நேஷனல் ஆடிட் பீரோவிடமும், இந்தியர் எவருக்கும் கமிஷன் பணம் கொடுக்கப்படவே இல்லை என்றும், பழைய காண்ட்ராக்டுகளுக்குப் 'பணி முடிப்புத் தொகை' மட்டும் — அதுவும், தீவிரமாக பேரம் பேசிய பிறகே கொடுக்கப்பட்டது என்றும், மார்ச் 24, 1986 — இல் இந்தியாவுடன் செய்து கொண்ட பீரங்கி விற்பனை ஒப்பந்தத்துக்கும் இதற்கும் சம்பந்தமே இல்லை என்றும் புளுகியிருக்கிறது. தவிர, இந்திய அரசுடன் மார்ச் 86 — இல் ஒப்பந்தம் செய்து கொள்ளுமுன், பனாமாவிலுள்ள (வின் சத்தாவுடன் தொடர்பு உள்ள) ஸ்வென்ஸ்கா நிறுவனத்துடன் எந்த ஒப்பந்தமும் கையெழுத்திடவில்லை என்றும் உண்மைக்குப் புறம்பாகச் சொல்லியது.

நாங்கள் வெளியிட்டுள்ள ஆவணங்களின்படி ஸ்வென்ஸ்கா, ஏ. இ. சர்வீசஸ், மொரெஸ்கோ ஆகிய மூன்று கம்பெனிகளுக்கும் கமிஷன் தொகைதான் கொடுக்கப்பட்டது; பணி முடிப்புத் தொகை அல்ல. கொடுக்கப்பட்டவை கமிஷன்தான் என்று ஆவணங்கள் நிரூபிக்கின்றன. கோட் டெம்பர் 62 என்பது கமிஷன் தொகையை மட்டுமே குறிக்கும்.

ஒவ்வொரு விற்பனையின் போதும், கமிஷன் என்றே கணக்குக் காட்டப்பட்டு, கிரெடிட் நோட்கள் மூலமாகப் பணம் கணக்கிடப்பட்டு, ஸ்விஸ் வங்கிகளில் கட்டப்பட்டிருக்கிறது.

கூட்டுப் பார்லிமெண்டரி கமிட்டியிடமும் பிறரிடமும் கடைசியாகக் கொடுக்கப்பட்ட 'பணி முடிப்புத் தொகை' டிசம்பர் 86 — லேயே முடிந்து விட்டது என்று சொல்லிவிட்டு, அதற்குப் பிறகும், மார்ச் 1987 வரை கமிஷன் தொகையை போஃபோர்ஸ் கொடுத்துக் கொண்டே இருந்திருக்கிறது.'

காண்ட்ராக்ட் அடிப்படையிலான இந்த கமிஷன் தொகைகளைக் கொடுத்தபோதெல்லாம், போஃபோர்ஸ் கையாண்ட முறை விசித்திரமானது. ஸ்வென்ஸ்கா நிறுவனத்துக்குக் கொடுத்த 30.5.86 ஆவணத்தின்படி 2.24% கமிஷன் (1.88 மில்லியன் ஸ்வீடிஷ் க்ருனர்கள்) கொடுத்தாலும், கிடைத்திருக்கிற பிற டாகுமெண்டுகள்படி, இந்தியா போஃபோர்ஸுக்குக் கொடுக்கும் பீரங்கி சப்ளைக்கான பணத்தில் 0.96% முதல் 6%



• என். ராம்



● நேரா



● போஃபோர்ஸ் பீரங்கி

வரை கூட கமிஷன் கொடுத்திருக்கிறது! ஒவ்வொரு டெலிவரியின் போதும் இப்படித் தொடர்ந்து கொடுத்து வந்திருக்கிறது. பணி முடிப்புத் தொகை என்பது கமிஷன் ஏஜெண்டிடம் தொடர்பு துண்டிக்கப்பட்ட தருணத்திலேயே ஒரே தொகையாகத் தரப் பட வேண்டியதல்லவா?

இவற்றுக்கெல்லாம் சாட்சியம் எதுவும் இல்லை என்று ஸ்வீடிஷ் பிராசிக்யூடர் லார்ஸ் ரிங்பெர்க் ஒரு போதும் சொல்ல வில்லை. 'இந்தியாவிலிருந்து தேவையான விவரங்கள் எனக்குக் கிடைக்கவில்லை' என்றுதான் அவர் ஆதங்கப்பட்டார். தயவு செய்து தகவல்களைத் தாருங்கள் என்று இந்திய பார்லிமெண்டரி கூட்டுக் கமிட்டிக்கு ஒரு செய்தி அனுப்பிப் பார்த்தார். ஆனால் கமிட்டித் தலைவர் சங்கரானந்தோ, 'அப்படி எதுவும் கொடுக்க முடியாது. ஏனென்றால் கூட்டுக் கமிட்டியின் நடவடிக்கைகள் எல் லாம் ரகசியமானவை. கமிட்டி, பார்லி மெண்டுக்கு மட்டுமே கட்டுப்பட்டது!' என்று வெளிப்படையாக அறிவித்துவிட்டார்.

ஜனவரி 88 — இல் இந்தியப் பிரதமர் ஸ்வீடனுக்கு விஜயம் செய்யு முன், பிராசிக் யூடர் ரிங்பெர்க் இந்தியக் குழுவைச் சந் தித்து போஃபோர்ஸ் விஷயமாகப் பேச விரும்புவதாக அறிவித்தார். இந்திய அரசும் ஸ்வீடிஷ் அரசும் சேர்ந்து கொண்டு அவர் முயற்சியை முறியடித்தன. ஸ்வீடிஷ் அரசே அவரது வேண்டுகோளை நிராகரித்துவிட் டது.

ஸ்வீடிஷ் தரப்பில் செய்யப்பட்ட விசாரணை அளவுக்குக்கூட இந்தியாவில் எதுவும் உருப்படியாகச் செய்யப்பட வில்லை என்று ரிங்பெர்க் வருத்தப்பட்டார். சி. பி. ஐ. போன்ற ஸ்தாபனத்தை இந்த விஷயத்தில் இந்தியா முடுக்கி விட்டிருந்தால் விஷயம் வெளிவந்திருக்கும்; ஆனால் இந்தியா அந்த அக்கறை காட்டாதது பற்றி ரிங்பெர்க் வருத்தம் தெரிவித்தார். அதுமட்டு மல்ல, இந்தியா தன்னிடமிருந்து எத்தகைய தகவலையும் கேட்டு விசாரிக்கவில்லை என்றும் குறைப்பட்டுக் கொண்டார்.

போஃபோர்ஸ் நிறுவனம், யாருக்கெல் லாம் பணம் தந்தது என்பது பற்றி வாயைத் திறக்க மாட்டேன் என்கிறது. ஸ்வீடிஷ் சட்டப்படி, ஒரு நிறுவனத்தின் கணக்கு வழக்கு விவகாரங்களை வெளியே யாருக் கும் சொல்லத் தேவையில்லை என்று பாது காப்பு இருக்கிறதாம். அப்படியானால் ஈரான் விஷயத்தில் மட்டும் அமெரிக்கா வுக்குத் தகவல்கள் எப்படிக் கிடைத்தன? இந்திய அரசு மனம் வைத்தால் இது சாத்தி யமே!

ஸ்வீடிஷ் விசாரணைக் குழுவிடம், பிட்கோ — மொரெஸ்கோ — மொய்னோ உடன் ஆன ஒரிஜினல் கமிஷன் ஒப்பந்தம் எதுவும் தங்கள் ரெகார்டுகளில் இல்லை என்று சொல்லியது போஃபோர்ஸ். சுமார் 80 மிலியன் ஸ்வீடிஷ் க்ரூனர்களை 1986—இல் கொடுத்தற்கான ஆவணங்களை 'ஹிந்து' ஏப்ரல் 22 — ஆம் தேதி வெளியிட்டு இந்தப் பொய்யை அம்பலப்படுத்தியது.

இந்த ஆவணங்கள் எல்லாம் உண்மையை அப்படியே அப்பட்டமாக எடுத்துக் காட்டுகின்றன. இவை ஆவணக் காப்பகத்திலும் சென்ட்ரல் பாங்க் ஆஃப் ஸ்வீடனிலும், ஸ்வீடிஷ் பார்லிமென்டரி கமிட்டியிடமும் கிடைக்கின்றன. முயற்சி செய்தால் இவை மட்டுமல்ல, இன்னும் பல ஆவணங்களும் கிடைக்கும். ஆனால் கிடைக் கவே வேண்டாம், பார்க்கவே வேண்டாம் என்று இந்திய அரசு கண்ணை மூடிக்கொள்ள விரும்பினால் அது வேறு விஷயம்!

**● இந்த டாக்குமெண்டுகள் உங்களுக்கு எப்படிக் கிடைத்தன? பத்திரிகை தர்மம் கடைப்பிடிக்கப் பட்டதா?**

முழுக்க முழுக்க, எங்களுக்குக் கிடைத்தது எல்லாம் ஆதாரபூர்வமான 'இடங்களி' லிருந்துதான். அந்த 'இடங்க'ளை வெளியில் தெரிவிக்காமல் காப்பதும் எங்கள் கடமை. அந்த 'இடங்க'ளும் எங்களுக்குப் பரிபூரண

மாக ஒத்துழைப்பதாக உறுதியளித்திருக் கின்றனர்.

இந்த டாக்குமென்டுகளை இப்போது நாங்கள் வெளிக் கொண்டுவரவில்லை என்றால், கூடிய சீக்கிரத்திலேயே வேறு யாராவது கண்டுபிடித்து வெளியிட்டிருப் பார்கள். இதைத் தவிர்க்கவே முடியாது.

**• இப்போது, அரசு என்ன செய்ய வேண்டும் என்று நினைக்கிறீர்கள்?**

சி. பி. ஐ. யைத் தீவிரமாக விசாரிக்கச் சொல்லியிருக்கிறது அரசு. அவர்களுக்குக் கொஞ்சம் அவகாசம் கொடுப்போம். சென்ற தடவை அரசு அவர்கள் உதவியை நாடவில்லை. பார்லிமென்டரி கூட்டுக் கமிட்டிக்கு உதவ மட்டுமே சொல்லிவிட்டு நிறுத்திக் கொண்டது. இப்போது சீரியஸாக விசாரிக்கச் சொல்லியிருக்கிறது. ஆனால், விசாரணையின் முக்கிய, அடிப்படையான அம்சங்கள் என்ன? வின் சத்தாவின் விசாரணையில் என்ன தெரிந்து கொண்டார்கள் என்பது எல்லாம் இன்னும் வெளியாக வில்லை. பொறுத்திருந்து பார்ப்போம்......

அக்கவுண்ட் நம்பர் முதற்கொண்டு கொடுத்திருக்கிறோம். பணம் யார், யார் கைக்குப் போயிருக்கிறது என்று கண்டு பிடிக்கட்டும்! போஃபோர்ஸுடனும் சி. பி. ஐ. மோதிப் பார்க்க வேண்டும்!

**• நிருபர் சித்ரா சுப்பிரமணியத்தின் பங்கு என்ன?**

சித்ராவுக்குத்தான் முழுப் பெருமையும் சேர வேண்டும். மிகக் கடினமான பணியை மேற்கொண்டு, வெகு சிறப்பாகச் செய்தார் அவர். கண்ணியமாக, நாணயமாகச் செய் திருக்கிறார். ஆவணங்களையும் தகவல்களையும் கொடுத்தவர்கள், அவரை முழுமையாக நம்பிக் கொடுத்தார்கள். நாங்கள் இங்கே செய்ததெல்லாம் அவற்றின் பரிமாணங்களை, விளக்கங்களை ஒருங்கிணைத்து வழங்கியதுதான். இவை அத்தனையும் மெய் யான ஆவணங்கள். கவனமாகச் சரி பார்த்தே வெளியிட்டோம்.

**• போஃபோர்ஸ் கமிஷன் விவகாரத்தை ஒரு மர்மத் தொடர்கதை மாதிரி வெளியிட்டு வருகிறீர்களே... அரசு ஏதாவது இடையூறு செய்கிறதா?**

(சிரித்து) இன்னும் வரும். கிடைக்கக் கிடைக்க வெளியிடுவோம். இதுவரை அரசுத் தரப்பிலிருந்து, 'போதும், நிறுத்துங்கள்!' என்று எச்சரிக்கையோ, கட்டளையோ வரவில்லை!

**• எப்படி இவை உங்கள் கைகளுக்கு வந்து சேருகின்றன?**

முதலில் ஃபேக்ஸிமிலி முறையில் சில ஆவணங்கள் வந்தன. இப்போது நம்பத் தகுந்தவர் மூலம் கொண்டு வரப்படுகிறது.

**• வின் சத்தா 'ஹிந்து' ஆசிரியருடன் பேசியதாகவும், மறுப்பு வெளியிடும்படி கேட்டுக் கொண்டதாகவும் செய்தி வெளியாகியிருக்கிறதே?**

ஆசிரியர் என்றால் ஜி. கஸ்தூரி. ஆனால் வின் சத்தா பேசியது என்னுடன்தான். மறுப்பு வெளியிட என்ன இருக்கிறது!

**• பிரதமரை மறைமுகமாகவோ, நேரிடையாகவோ இதில் சம்பந்தப்பட்டிருப்பதாகக் குற்றம் சாட்டுவீர்களா?**

இப்போதைக்கு இல்லை. நான் நியாய உணர்வோடு நடந்து கொள்ள விரும்பு கிறேன். ஆனால் 'இந்திய அரசியல்வாதிகளோ, அரசியல் கட்சிகளோ இதில் சம்பந்தப்படவில்லை' என்று எப்படி இப்போதே சொன்னார் என்று மட்டும் புரியவில்லை.

— சித்தார்த்.

அடுத்த இதழில்...

**“மேலிடம் தான் முடிவு செய்ய வேண்டும்...”**

—மூப்பனார் சிறப்புப் பேட்டி



ஆளுனரின் ஆலோசகர்களில் ஒருவரான ஜி. வி. ராமகிருஷ்ணா ஆந்திராவிலும், டெல்லியிலும் பணியாற்றி பழுத்த அனுபவம் பெற்ற ஐ.ஏ.எஸ். அதிகாரி. கிட்டத்தட்ட பதினைந்துக்கும் மேற்பட்ட துறைகளுக்குத் தற்போது பொறுப்பாக இருக்கிறார். தமிழ் நாட்டில் அத்தியாவசியப் பொருட்களின் நிலவரம் பற்றி ஆலோசகரைப் பேட்டி கண்ட போது....



# தட்டுப்பாடுகள் இருக்கிறது; முறைகேடுகள் நடக்காது!

— ஆளுனரின் ஆலோசகர் பேட்டி.

நிருபர்: அரசிடம் தற்போது போதிய அளவு அரிசி ஸ்டாக் உள்ளதா?

ஜி. வி. ராமகிருஷ்ணா: இந்தியாவிலேயே, நெல் உற்பத்தியில், பஞ்சாபுக்கு அடுத்தபடியாக தமிழ்நாடு இருந்தது. ஆனால் துரதிருஷ்டவசமாக 'நெற் களஞ்சியம்' என்று சொல்லப்படும் தஞ்சாவூரில் நிலைமைகள் சரியாக இல்லை. அதற்குக் காரணம் தண்ணீர் இல்லாததுதான். வருடத்திற்கு இரண்டு மூன்று போகம் விளைந்த பல இடங்களில் இன்று ஒரு போகம் விளைவதே பெரிய சாதனையாக இருக்கிறது. மத்தியத் தொகுப்பிலிருந்து, மாதா மாதம் நமக்கு 40,000 டன் முதல் 70,000 டன் வரை அரிசி கொடுக்கப்பட்டு வந்தது. போன வருடம் இந்தியாவின் பெரும்பகுதியில் வறட்சி நிலவியதால் மத்தியத் தொகுப்பிலிருந்து கொடுப்பது குறைக்கப்படுவதாக இருந்தது. ஆனால் தமிழ் நாட்டின் நிலைமையை எடுத்துச் சொல்லி, இந்த வருடம் ஏப்ரல் முதல் நவம்பர் வரையிலான எட்டு மாதங்களுக்கு மாதம் ஒன்றுக்கு 70,000 டன் சப்ளை செய்ய வேண்டிக் கொண்டிருக்கிறோம். மத்திய அரசும் ஒப்புக் கொண்டுவிட்டது. அப்படி இருந்தும் கிட்டத்தட்ட மூன்று லட்சம் டன் பற்றாக்குறையாக இருக்கும். அதைப் பஞ்சாப், ஆந்திரா ஆகிய மாநிலங்களில் வாங்குவதாக இருக்கிறோம். வெளி மார்க்கெட்டில் விற்கப்படும் அரிசி விலை ஏறுமுகமாக இருப்பதை அரசு கவனித்துக் கொண்டு இருக்கிறது. பொது விநியோக முறை மூலம் வழங்கப்படும் அரிசி எந்த காரணத்தைக் கொண்டும் குறைக்கப்படாது என்பதை உறுதியாகக் கூறுகிறேன்.

கே: ரேஷன் கடைக்குப் போனால் பாமாயில், ஒழுங்காகக் கிடைப்பதில்லையே?

பதில்: மத்திய அரசு மாதத்திற்குப் பத்தாயிரம் டன் பாமாயில் வழங்குகிறது. இந்த எண்ணெய் முழுக்க முழுக்க இறக்குமதி செய்யப்படுவது. தற்போது, தமிழ் நாட்டுக்கு ஒதுக்கப்படும் எண்ணெயின் அளவு குறைந்து கொண்டு வருகிறது. ஆனால், மக்கள் கஷ்டப்படக் கூடாது என்பதற்காகக் குறையும் பாமாயில் அளவை ஈடுகட்டுவதற்காகச் சூரிய காந்தி எண்ணெய் கொடுக்கிறோம்.

கே: ரேஷன் கடைகளில் கொடுக்கப்படும் மண்ணெண்ணெய் அளவு மிகவும் குறைகிறது....?

பதில்: பல ரேஷன் கடைகளுக்கு நான் திடீரென்று போய்ப் பார்த்து விசாரித்திருக்கிறேன். சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்குச் சொல்லியிருக்கிறேன்.

கே: ஆவின் பால் பற்றாக்குறையா?

பதில்: பால் விநியோகத்தைப் பொறுத்த மட்டில், வருடத்தில் ஆறு மாதம் நன்றாக இருக்கும். காரணம் மாடுகள் நன்றாகக் கறக்கும். ஆனால் வெய்யில் காலங்களில், கறவை குறைந்து போகும். சென்னைக்குத் தேவை 5.2 லட்சம் லிட்டர். ஆனால் வெய்யில் காலத்தில் நான்கு லட்சம் லிட்டர் தான் உற்பத்தி பற்றாக்குறையைச் சரிக்கட்ட பால் பவுடரை உபயோகிக்க வேண்டும்.

ஆனால் 'ஆவின்' காரர்கள் பால் பவுடரை விற்று விடுகிறார்கள். இதனால் பஞ்ச காலத்தில் பால் பவுடரும் இல்லாது போகிறது. அது இருந்தால் பற்றாக்குறையைச் சமாளிக்கலாம். சமீபத்தில் எனக்கு இந்த விஷயம் தெரிய வந்த பிறகு, பால் பவுடர் விற்பனை இனி கூடாது என்று உத்தரவு போட்டுள்ளேன்.

கே: அரிசி பற்றாக்குறையைச் சரிக்கட்ட வெளி மாநிலங்களிலிருந்து வாங்க இருப்பதாக சொல்கிறீர்கள்! தனியார்களிடம் வாங்கும் போது முறைகேடுகள் இருக்காதா?

பதில்: உணவுச் செயலாளர், நிதிச் செயலாளர், சிவில் சப்ளைஸ் தலைவர், ஆகிய மூவர் கொண்ட கமிட்டிதான் இந்தப் பணியில் ஈடுபடும். முறைகேடுகள் இருக்காது!

கே: மே மாதம் 27–ம் தேதி நீங்கள் பத்திரிகையாளர்களிடம் பேசும் போது, வெளி மாநிலங்களில் இருந்து வாங்கப்படும் அரிசி பத்து நாட்களில் வந்து விடும் என்றீர்கள். ஆனால் ஜூன் மாதம் 8–ம் தேதிதான் நீங்கள் மேற் சொன்ன கமிட்டியைப் போட்டுள்ளீர்கள். இந்த இடைக் காலத்தில் குன்றி மணி அளவு அரிசி கூட வாங்கப்படவில்லையா?

பதில்: இல்லை.

கே: எங்களுக்கு வந்த தகவல்களை உங்களுக்குச் சொல்கிறோம். தமிழக அரசு ஆந்திராவில் கூட்டுறவுத் துறையைத் தொடர்பு கொண்டு அரிசி, வாங்குவதற்குப் பதிலாக நேரடியாகத் தனியார்களிடம் தொடர்பு கொண்டிருக்கிறது. (தனியார் வியாபாரிகள் லிஸ்ட் ஆலோசகருக்குத் தரப்பட்டது) தமிழ் நாடு கூட்டுறவு நுகர்வோர் வாரிய மற்றும் சிவில் சப்ளைஸ் அதிகாரிகள் ஆந்திராவில் தனியார்களிடம் பேரம் செய்து கமிஷன் பெற்றுக் கொண்டதாய் எங்களுக்குத் தகவல்கள் வந்து இருக்கின்றன. (விவரங்கள் ஆலோசகருக்குக் கொடுக்கப்பட்டன)

பதில்: ஆந்திராவில் இருந்து அரிசி வாங்குவது அந்த மாநில சிவில் சப்ளைஸ் மூலம்தான் நடைபெறுகிறது. அவர்கள் தான் தனியார்களிடம் பேசி பேரத்தை முடிவு செய்வார்கள். இந்தத் தனியார் வியாபாரிகள் ஆந்திரப் பிரதேச அரசால் வெளி மாநிலத்துக்கு அரிசி அனுப்ப லைசென்ஸ் வழங்கப்பட்டவர்கள்.

கே: ஆக, தனியார்கள் பங்கு இந்த விற்பனையில் இருக்கிறது அல்லவா!

பதில்: தனியார்கள் நேரடியாக தமிழக அரசு அதிகாரிகளுடன் பேச முடியாது. இடையில் ஆந்திர அரசு இருந்துதான் இந்த பேரத்தை முடிக்கும். எனினும் நீங்கள் தந்த விவரங்களை வைத்து செக்–அப் செய்கிறேன்.

கே: சங்கரன் கோயில் கூட்டுறவு பால் உற்பத்திச் சங்கத்தில், தகுதி பெறாத சில நபர்கள் இயக்குனர்களாக வந்து இருப்பதாகவும், பால்வளக் கூட்டுறவுத் துறையைச் சேர்ந்த ஒருவர் அந்த நபர்களைக் கையில் போட்டுக் கொண்டு கொள்ளையடிப்பதாகவும் எங்களுக்குத் தகவல் வந்துள்ளது. இந்தச் சங்கத்தில் பல லட்சம் ரூபாய்கள் அமுக்கப்பட்டதாகச் சொல்லப்படுகிறது.

பதில்: இது பற்றி விசாரித்துச் சொல்கிறேன்.

கே: டி.யூ.சி.எஸ்.–காரர்கள் நல்லெண்ணெய்க்காக எள் வாங்கியதில் முறைகேடுகள் இருப்பதாகச் சொல்லப்படுகிறது. கரூரில் தரக்குறைவான எள் விளைவதாகவும், அதைக் கொள்முதல் செய்திருப்பதாகவும் குற்றச்சாட்டுகள் வந்திருக்கின்றன!

பதில்: இது பற்றியும் விசாரித்துச் சொல்கிறேன். ஒரு வாரம் சென்று சந்திப்போம்.

**ஒரு வாரம் பொறுத்து ஆலோசகரைத் தொடர்பு கொண்ட போது......**

*** ஆந்திராவில் இருந்து அரிசி வாங்குவது சம்பந்தமாக...**

இதுவரை குன்றிமணி அளவு அரிசி கூட வாங்கப்படவில்லை என்பது தான் உண்மை. ஆனால் எந்தவித பிரச்னையும் வரக் கூடாது என்பதற்காக வாங்கும் முறையை மாற்றி இருக்கிறேன். இந்த விஷயத்தில் இனி தமிழ்நாடு கூட்டுறவு நுகர்வோர் அமைப்பின் பங்கு இருக்காது. அரசே நாளிதழ்கள் மூலம் டெண்டர் கோர இருக்கிறது. இதன் மூலம் எந்தப் பிரச்னைகளும் வராது என்று கருதுகிறேன்.

*** சங்கரன் கோயில் பால் கூட்டுறவுச் சங்க விஷயம்......**

விசாரித்த போது நீங்கள் சொன்ன தகவல்களில் உண்மை இருப்பது தெரிய வந்தது. சம்பந்தப்பட்ட அதிகாரிகள் மீது விசாரணை நடந்து வருகிறது.

*** டி. யு. சி. எஸ். எள் வாங்கியது குறித்து...:**

கரூரில் கூட்டுறவுச் சங்கம் மூலம்தான் எள் வாங்கப்பட்டிருக்கிறது. மேலும் டி.யூ.சி.எஸ்.ஸின் மொத்த எள் தேவைகளில் 15 முதல் 20 சதவீதமே கரூரில் வாங்கப்பட்டிருக்கிறது. அதுவும் தரம் வாய்ந்தது தான் என்று விசாரித்த போது தெரிந்தது.

மிகுந்த பொறுப்புணர்வுடன் பதில்கள் அளித்ததுடன், புகார்களை விசாரித்து உடனுக்குடன் நடவடிக்கை எடுத்த ஆளுனரின் ஆலோசகருக்கு நன்றி கூறி விடை பெறுகிறோம்.

— ப்ரியன்

படம்: கண்ணன் (சுபா)

# "சுவையுடன் வளர ராசிபலன் சொல்கிறது ஃபாரெக்ஸ்"



கடகக் குழந்தை
ஜூன் 22-ஜூலை 23

நீங்கள் ராசிபலனை நம்புகிறவர்களானால், கடகக் குழந்தையைப் பற்றிய சில குணங்களை அறிந்து கொள்ளுங்கள். தன் உணர்வுகளை எளிதில் வெளிக் காட்டும் இதன் முகபாவத்திலிருந்தே கடகக்குழந்தையின் இன்ப, துன்பத்தைத் தெரிந்து கொள்ளலாம். இதனால் உங்கள் எண்ணம் பெருமளவில் கடகக் குழந்தையுடன் பிணைந்திருக்கும். தன் மீது அன்பிருக்கிறதா என அறிய விரும்பும் கடகக் குழந்தையினை உங்கள் கண்காணிப்பில் கையாள்வது எளிது. தன்னை பாதுகாக்கும் திறனை நன்கு தெரிந்து கொண்டது கடகக்குழந்தை.

ராசிபலனை நம்பினாலும், நம்பாவிட்டாலும், குழந்தையின் போஷாக்கு என்றால் முழு நம்பிக்கைக்கும் பாத்திரமானது ஃபாரெக்ஸ்.

4-வது மாதம் முதல் உங்கள் கண்மணிக்குப் "பாலடங்கிய ஃபாரெக்ஸை" ஊட்டுங்கள். இது முழுமையான ஆடைப்பாலிலிருந்து தயாராவதால் குழந்தை நன்கு வளரத் தேவையான கால்ஷியம், தாது உப்புக்கள், புரதம், வைட்டமின்கள், கோதுமைத்தானியம் அனைத்தும் உள்ளடக்கியது.

6-வது மாதம் முதல் ஃபாரெக்ஸ்-வெஜ் ஊட்டுங்கள். இது ருசியுடன் கூடிய ஊட்டச் சத்துக்களடங்கியது.






**சுவையுடன் வளரும் வழி**

GX/49/213 TML



* தமிழகப் பிரிவின் துவக்க விழா. விளக்கேற்றுபவர் டி.டி. வாசு. அருகே வயலின் கலைஞர் விஜி கிருஷ்ணன்.

# கலை ஆர்வத்தை வளர்க்கும் மாணவ ரசிகர்கள்

இல்லி ஐ.ஐ.டி.யில் படித்து விட்டு, அமெரிக்காவில் கொலம்பியா பல்கலைக் கழகத்துக்குப் போனார் கிரண்சேத். அங்கே பல்கலைக் கழக வளாகத்துக்குள், இந்தியாவிலிருந்து வந்திருந்த உஸ்தாத் அமீருதீன் தாகரின் இந்துஸ்தானி கச்சேரியை ஏற்பாடு செய்திருந்தார்கள். 'நிறைய அழகான பெண்கள் வந்திருப்பார்கள் பார்த்து ரசிக்கலாம்!' என்று கல்லூரி நண்பர்களுடன் போனார் கிரண். தாகரின் பாட்டில் ஒரேயடியாக லயித்துப் போய், பெண்களை ஏறிட்டும் பார்க்காமல், கடைசி வரை கச்சேரியைக் கேட்டு விட்டு வந்தார். இசை அவ்வளவுக்கு அவரை ஈர்த்து விட்டது!

'மாணவர்கள் சாஸ்திரீய இசையில் ஏன் ஈடுபாடு கொள்வதில்லை?'' என்று யோசித்தார். 'அவர்களுக்கு அடிக்கடி கேட்க வாய்ப்பு ஏற்படுவதில்லை. அதனால் ஆர்வமும் உண்டாகவில்லை. இதுதான் காரணம்' என்று உணர்ந்தார். இசையைக் கேட்க மாணவர்கள் வர வேண்டும் என்று காத்திராமல் இசை மாணவர்களைத் தேடிப் போக வேண்டும் என்று தீர்மானித்தார். **SPIC-MACAY**-யின் வித்து, அமெரிக்காவில் கொலம்பியா யூனிவர்சிடியில் விதைக்கப்பட்டது! இந்திய சம்பிரதாய, சாஸ்த்ரீய இசையைக் கல்லூரிகளிலும் பள்ளிகளிலும் மாணவ – மாணவியரிடையே பரப்பி வரும் இந் நிறுவனத்துக்கு இன்று பத்து வயது ஆகி விட்டது. கிரண் சேத் தில்லிக்குத் திரும்பி, ஐ.ஐ.டி.யில் பேராசிரியராகச் சேர்ந்த போது எல்லாக் கல்லூரிகளிலும், இப்படி இந்திய இசையைக் 'கொண்டு போக' முடிவு செய்தார்.

''கல்லூரிகளில் போய்க் கர்நாடக இசையும், பரத நாட்டியமும் வைப்பார்களா? யார் கேட்பார்கள், பார்ப்பார்கள்? 'ஊய்! ஊய்!' என்று சத்தம் போட மாட்டார்களா?''

''சென்னையில் மட்டும் 12 கல்லூரிகளிலும் பதினாறு பள்ளிக்கூடங்களிலும் இசைக் கச்சேரிகளும் நடன நிகழ்ச்சிகளும் நடத்தினோம். ஒரே சீரிஸில் 50க்கு மேற்பட்ட விளக்க உரைகள் கூட நடத்தினோம். ஒரு கூச்சல்,ரகளை கிடையாது. நன்றாகவே ரசித்தார்கள்.''

''இதை எல்லாம் நடத்த நீங்கள் ஒவ்வொரு கல்லூரி முதல்வருடனும் எப்படித் தொடர்பு கொள்ளுகிறீர்கள்? கடிதம் போடுகிறீர்களா?''

''இல்லை. நாங்களே நேரில் போய் எடுத்துச் சொல்லுகிறோம். ஏற்பாடு செய்து விட்டுத் திரும்புகிறோம்.''

''கலைஞர்களை நீங்களே – அதாவது மாணவர்களே – தேர்ந்து எடுக்கிறீர்களா?''

''ஆமாம். கூடவே சில பெரியவர்களையும் ஆலோசனை கேட்பதுண்டு. நாங்கள் கலைஞரைப் பிரபலப்படுத்துவதில்லை. கலையைத்தான் பிரபலப்படுத்துகிறோம்.''

''பணத்துக்கு என்ன செய்கிறீர்கள்?''

''சில தொழிலதிபர்கள் எங்கள் ஆர்வத்தையும், உற்சாகத்தையும் பார்த்து விட்டு எங்களுக்கு உதவுகிறார்கள்.''

''கலைஞர்கள் தங்கள் ஊதியத்தைக் குறைத்துக் கொள்ளுகிறார்களோ?''

''ஓ எஸ்! மாணவர்களுக்காக வந்து பாடுகிறோம்,இசை ஆர்வத்தை வளர்க்கிறோம் என்ற சந்தோஷம் நிச்சயம் அவர்களுக்கு ஏற்படுகிறது.''

இன்னும் பச்சையப்பன் கல்லூரிக்கும், நியூ காலேஜுக்கும் இவர்கள் போகவில்லை. ''கட்டாயம் அங்கும் போவோம்!'' என்கிறார்கள் ஸ்பிக் மெக்கே இளைஞர்கள்.

சில கல்லூரி, மாணவர்களை இசையில் ஈடுபட வைப்பது கஷ்டம் என்று தோன்றுகிறபோது, பிரபலமான கலைஞரை அங்கே அழைத்துப் போய் வெற்றி கண்டு விடுவார்களாம்!

— எஸ். வி. என்.


சந்திரசேகர்
ராஜீவுக்கு மாற்று இவரை விட்டா வேற ஆள் இல்லையாக்கும்!
வி.பி.சிங்
செஸ் காய்களைப் போல உங்க இஷ்டத்துக்கு எங்களை நகர்த்தலாம்னு பார்த்தீங்களா!
நெடுஞ்செழியன்
பண்ருட்டி
மடியிலே பால் இருந்தா சொம்புலே வராதா? ... போதும் விடுங்க...
மக்கள்
தமிழக அரசின் நிதி நிலைமை



# கல்கி

1988 ஜூலை 10
மலர் 46 இதழ் 50
விபவ ஆனி 26



## "முன்னாள் முதல்வர்கள் எறியப்படும் குப்பைத்தொட்டி!"

அமைச்சரவையை அடிக்கடி மாற்றிக் கொண்டிருந்தாலே நாட்டின் பிரச்னைகள் தாமாகத் தீர்ந்துவிடும் என்று ராஜீவ் நினைப்பதாகத் தோன்றுகிறது. கின்னஸ் புத்தகத்தில் இடம்பெறத் தக்க அளவில் அத்தனை தடவை மாற்றி விட்டார்!

இடைத்தேர்தலில் காங்கிரஸ் உ. பி. யில் அடைந்த மாபெரும் தோல்விக்கு யாரையாவது பலிகடா ஆக்கவேண்டியிருந்தது. வீர் பகாதுர் சிங்குக்குத் தண்டனை கொடுத்தாக வேண்டும். ஆனால் அவரை முதல்வர் பதவியிலிருந்து இறக்கி விட்டால் மட்டும் போதாது. அவர் கோபமும் வருத்தமும் அடைந்து கட்சிக்குள்ளிருந்தபடியே ராஜீவுக்கு எதிராகச் செயல்பட ஆரம்பிக்கலாம். இந்தப் பழிவாங்கலைத் தவிர்த்துவிட, அவருக்கு மத்திய அமைச்சரவையில் பதவி தந்து தமக்குப் பக்கத்திலேயே வைத்துக் கொள்வதுதான் வழி! இப்படியே செய்து செய்து இன்று ராஜீவின் அமைச்சரவையில் ஏழு முந்நாள் முதலமைச்சர்கள் உள்ளனர்! எனவேதான் பி. ஜெ. பி. தலைவர் அத்வானி, "மத்திய அமைச்சரவையானது, முந்நாள் முதல்வர்களைத் தூக்கி எறியும் குப்பைத் தொட்டியாகி விட்டது!" என்று வர்ணித்துள்ளார்.

தேர்தலுக்கு முன், கட்சியைப் பலப்படுத்த வேண்டும் என்ற நோக்கம் ராஜீவுக்கு இருப்பது தெளிவு. அதனால்தான் தாம் கவனிக்க வேண்டிய துறைகளைக் குறைந்தபட்சமாக்கிக் கொண்டு பிறர் மீது பொறுப்புக்களைச் சுமத்தியிருக்கிறார். ஆனால் ராஜீவ் தற்போது செயல்படுகிற விதம் நீடித்தால், அவரால் கட்சியையும் கட்டிக் காக்க முடியாது; நாட்டையும் முன்னேற்ற முடியாது.

பிரதமரின் பாதுகாப்பு என்ற பெயரில் மக்களின் வரிப்பணத்தை ஏராளமாகச் செலவழித்துக் கொண்டு சுற்றுப்பயணங்களை மேற்கொள்வதாலோ, அல்லது மாநிலங்களில் கட்சித் தலைவர்களைத் தமது மனம் போன போக்கில் மாற்றிக் கொண்டிருப்பதாலோ கட்சி வளராது; பலப்படாது. அடிமட்டத்தில் காங்கிரஸ் தொண்டர்கள், தாங்கள் கட்சியிலும் அதன் வளர்ச்சியிலும் முக்கிய பங்கு வகிப்பதாக உணர வேண்டும். இதற்குக் கட்சித் தேர்தல்களை நடத்துவதுதான் வழி. கிராமம், நகரம், வட்டம், மாவட்டம், மாநிலம் என்று சிறிய பெரிய தலைவர்கள் ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்பட்டு வர வேண்டும். அவர்கள் கட்சியின் கொள்கைகளை உருவாக்கவும் செயல் திட்டங்களைத் தீட்டவும் உதவ வேண்டும். கட்சி, தமது முயற்சியால் வளர்கிறது என்ற உணர்வு அவர்களுக்கு ஏற்பட வேண்டும். ராஜீவின் சுற்றுப் பயணங்கள் இதற்கு உதவி செய்யுமானால்தான் கட்சி பலப்படுவதுடன், அதன் தொண்டர்கள் உற்சாகமாக உழைத்து, மேன்மேலும் மக்களைக் கட்சியின்பால் ஈர்க்க முயற்சி செய்வார்கள்.

இதேபோல், நாட்டின் பிரச்னைகளை அமைச்சரவை மாற்றங்களால் மட்டுமே தீர்த்துவிட முடியாது என்பதையும் ராஜீவ் அறிந்துதானிருக்க வேண்டும். அந்தந்தத் துறைகளுக்கு ஏற்ற அறிவாளிகளான அமைச்சர்கள் வந்து அமர்ந்தால்தான் பிரச்னைகள் தீரும். உள்ளத் தூய்மையை, ஒளிவு மறைவற்ற வெளிப்படையான பேச்சை, அறிவாற்றலை ராஜீவ் சகித்துக் கொள்வதுடன் வரவேற்றுப் பாராட்டவும் வேண்டும். ஒருவரது ஆற்றலும், ஒளிவு மறைவற்ற பேச்சும், நடத்தையும், தூய்மையும் தமக்கு இடையூறு விளைவிப்பதாக ராஜீவ் நினைக்கத் தொடங்கும்போது வி. பி. சிங்குகளும், அருண் நேருக்களும், அருண் சிங்குகளும் டாட்டா கூறிவிட்டுப் போய்விடுவார்கள். ஜால்ரா தட்டும் உதவாக் கரைகள் மட்டுமே சுற்றிச் சூழ இருப்பார்கள். இவர்களால் நாட்டின் பிரச்னைகளை எதிர்கொண்டு சந்தித்துப் போராடித் தீர்க்க முடியாது.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



* அல்லிக்குளம் இருந்த இடம்...

# சென்னையின் நுரையீரலை நொறுக்காதீர்கள்!

"எம்.ஜி.ஆரின் நண்பரென்றால் இத்தனை சலுகைகளா?'' என்ற தலைப்பில் 25.1.87 கல்கி இதழில் ஒரு கட்டுரை வெளியிட்டிருந்தோம். சென்னையில் முன்பு மிருகக் காட்சி சாலை அமைந்திருந்த ஏரான இடத்தையும் அதையொட்டிய விஸ்தாரமான இடத்தையும் அமெரிக்காவில் உள்ள பழனி ஜி. பெரியசாமி மற்றும் வெளிநாட்டுத் தமிழர்களுக்கு ஹோட்டலும் அதிசய உலகமும் கட்டத் தமிழக அரசு குத்தகைக்கு வழங்க முன்வந்ததை அதில் கண்டித்திருந்தோம். அதற்குப் பல காரணங்களையும் சுட்டிக்காட்டியிருந்தோம்.

தற்போது, மேற்படி நிலத்தை 'ஓட்டல் கட்டும் இடமாக மாற்றி அறிவிக்க ஆட்சேபணை ஏதுமுண்டா?' என்று பொது மக்களை அபிப்பிராயம் கேட்டுச் சென்னைப் பெருநகர் வளர்ச்சிக் குழுவினர் விளம்பரம் வெளியிட்டுள்ளனர்.

பொது மக்கள் சார்பில் ஆட்சேபணைகளை எழுப்பி, கல்கி பத்திரிகை ஒரு கடிதத்தை அனுப்பியுள்ளது. அந்தக் கடிதம் பின்வருமாறு:

செயலர்,<br>
சென்னைப் பெருநகர வளர்ச்சிக் குழு,<br>
52, ஈ.வி.கே. சம்பத் சாலை,<br>
சென்னை — 600 007.

அன்புடையீர்,

'இந்து' 7.6.88 தேதியிட்ட நாளிதழில், தங்கள் விளம்பர அறிக்கை சம்பந்தமாக...

மேற்படி விளம்பரத்தில், வேப்பேரி கிராமம் சர்வே எண் 1267 மற்றும் 1268 நிலத்தில், பல்லவா ஓட்டல் உரிமையாளர்கள் தமிழ்நாடு சுற்றுலாக் கழகத்துடன் இணைந்து நட்சத்திர ஓட்டல் கட்ட விண்ணப்பித்திருப்பதாகவும்,

ஏற்கெனவே பொழுது போக்கு மையம் கட்டுவதற்காக ஒதுக்கப்பட்டிருந்த மேற்படி நிலத்தில் நட்சத்திர ஓட்டல் கட்டப்பட இருப்பதால் பொதுமக்கள் தமது ஆட்சேபணைகளைத் தெரிவிக்கலாம் என்றும் அறிவித்திருந்தீர்கள்.

ஓட்டல் கட்டப்படவிருக்கிறது என்ற தகவலை, தமிழ்ப் பத்திரிகைகளைப் பொறுத்தமட்டில் முதன் முதலாக ஒரு கட்டுரை வாயிலாகப் பொது மக்கள் கவனத்துக்குக் கொண்டு வந்தது கல்கிதான் என்ற முறையில், எங்கள் ஆட்சேபணை களை இங்கே உங்கள் முன் வைக்கிறோம்:



• கோபிநாதராவ்.

1. பொது மக்கள் ஏராளமான பேரைப் பாதிக்கும் இந்த விஷயத்தில், ஒரு குறிப் பிட்ட நபருக்கு மட்டும் மேற்படி நிலத்தில் ஓட்டல் கட்டவோ பொழுது போக்கு மையம் அமைக்கவோ உரிமை கொடுக்க நீங்கள் மேற்கொண்ட முறை சரியானது அல்ல. பொதுமக்களுக்கு விளம்பரம் மூலம் அறிவித்து விட்டு, யார் அந்த நிலத்தை, சுற்றுப்புறச் சூழல் கெடாத வகையில் மிகச் சிறப்பாகப் பயன்படுத்த விரும்புகிறார் களோ, அவர்களுக்கு அல்லவா குத்தகைக்கு விட்டிருக்க வேண்டும்? இதில் எப்படி ஒரு குறிப்பிட்ட நபருக்கு மட்டுமே நீங்களாக நிச்சயித்து, நிலத்தை விற்கவோ, குத்தகைக்கு விடவோ முடியும்?

2. மேற்படி நிலம் ஒரு தனி நபரின் சொத்தோ, உடைமையோ அல்ல. வரி கொடுக்கும் பொது மக்களின் பொதுச் சொத்து. அதைப் பயன்படுத்தும் உரிமையை நிர்ணயிப்பதில் பொது மக்களுக்கும் பங்கு இருப்பதை நீங்கள் உணர வேண்டும்.

3. நீங்கள் நிர்ணயித்துள்ள விலையும் மிக மிகக் குறைவு. குத்தகை என்று வைத் துக் கொண்டால்கூட, இத்தனை குறைந்த குத்தகையை எப்படி நீங்கள் ஒப்புக் கொள் ளலாம்? இந்தத் திட்டத்தில் பங்கு கொள் ளும் அரசுக்கே நஷ்டமல்லவா அது?

4. மேற்படி நிலத்தில் நட்சத்திர ஓட்டல் கட்ட ஏற்கெனவே மத்திய அரசின் சுற்றுலாத் துறை திட்டமிட்டுப் பிறகு அவர்கள் அந்த இடத்தின் சுற்றுப்புறச் சூழல், போக்கு வரத்து நெரிசல் இவற்றைக் கருத்தில் கொண்டு, அந்த யோசனையைக் கைவிட்டு விட்டார்கள். அப்படி இருக்க, நீங்கள் தொடர்ந்து, தனியார் ஓட்டல் கட்ட அங்கே எப்படி அனுமதியளிக்கலாம்?

5. தென் சென்னைக்காவது ஆங் காங்கே சில பூங்காக்கள் இருக்கின்றன. வட சென்னைக்கு அப்படி ஏதும் இல்லாத பட்சத்தில், அதிர்ஷ்டவசமாகக் கிடைத் திருக்கும் இந்த நிலத்தில், பசுமையைப் பாதுகாக்க, நீங்கள் பூங்காக்களை அமைத் துப் பொது மக்களின் நலனுக்கு அல்லவா முன்னுரிமை அளித்திருக்க வேண்டும்?

6. ஓட்டல் கட்டப்படவிருக்கும் நிலத் தைத் தவிர மீதி இடத்தில் பூங்கா அமைத்து, மரங்கள் வளர்க்கப்படும் என்று இப்போது கூறப்பட்டாலும், பிற்காலத்தில், ஓட்டல் வளர்ச்சி கருதி, மேற்படி பூங்காக்களும், மரங்களும் அழிக்கப்பட மாட்டா என்பது என்ன நிச்சயம்?

கடைசியாக —

மேற்படி நிலத்தின் வரைபடத்தைப் பார்வையிட எங்கள் பிரதிநிதி தங்கள் அலுவலக வரவேற்பறையில் இம் மாதம் 14—ஆம் தேதி வந்த போது, அது அவருக் குக் காண்பிக்கப்படவில்லை. மேற்படி வரைபடம் டெபுடி பிளானர் (C&D சானல்) அல்லது அஸிஸ்டெண்ட் பிளானர் (D சானல்) யாராவது ஒருவரிடம் இருக்கும் என்று தெரிவிக்கப்பட்டது.

தங்கள் அறிக்கையின்படி, மேற்படி வரைபடம் வரவேற்பறையிலுள்ள வர வேற்பாளரிடம் பொது மக்களின் பார் வைக்கு எளிதில் கிடைத்திருக்க வேண்டும். ஆயினும் அதை உங்கள் அறிக்கைக்கு மாறாக, பத்திரப்படுத்தி வைத்திருந்ததற்கு என்ன காரணம் என்பதையும் நீங்கள் விளக்கக் கோருகிறோம்.

பொது மக்கள் நலனுக்கு எதிராக, மேற்படி பசுமை நிலத்தை கான்க்ரீட் கட்டடங்களாகக் கட்டிப் பாழாக்க மாட்டீர்

• மிருகக்காட்சி சாலை இருந்த இடத்தில் காம்பவுண்டு சுவர் எழுப்பப்படுகிறது.



கள் என்று எதிர்பார்க்கிறோம்.

தங்கள் உண்மையுள்ள,

ஆசிரியர், கல்கி

கடிதத்தை அனுப்பியதோடு நில்லாமல் நிபுணர் கருத்தையும் கேட்டோம். நில விவகாரங்களிலும், கட்டடங்கள் விஷயத்திலும் நிபுணரான வி. எச். கோபிநாத ராவ் சொல்கிறார்:

''ஒரு பெரு நகரில் ஆங்காங்கே திறந்த வெளியிடங்கள் ஒதுக்குவதன் நோக்கம் என்ன? மனித தேகத்தின் நுரையீரல் மாதிரி நகருக்கு இவை செயல்படும். காற்று நிறையக் கிடைக்கிற பகுதிகளாக விளங்கும். மனதுக்கும் உடம்புக்கும் ஆரோக்கியத்தை அளிப்பதை விட அழகுபடுத்தும் பணியோ கேளிக்கையோ மேலானதல்ல. சுற்றிலும் கட்டிடங்களும், சாலைகளும் சூழ்ந்திருக்க, தூய்மையான காற்றை ஓர் அளவுக்கேனும் சுவாசிக்க மக்களுக்கு உரிமை உண்டு. நிலத்தடி நீரை 'ரீசார்ஜ்' செய்யவும், சீரான வடிகால் வசதிகளுக்கும் கூட இந்தத் திறந்த வெளி இடங்கள் அவசியம். திறந்த வெளியின் அளவைவிட, அதன் தன்மையே மிகவும் முக்கியம் என்பதை மறக்கவே கூடாது.

''இதற்கென்று சில அளவுகோல்கள் இருக்கின்றன. சென்னையில் 87 பூங்காக்களும், 37 விளையாட்டுத் திடல்களும் இருக்கின்றன. இவற்றின் பரப்பளவு முந்நூறு ஏக்கர். இது கிட்டத்தட்ட, ஆயிரம் பேருக்கு, சராசரியாக, ஏக்கரில் ஏழில் ஒரு பகுதி வருகிறது. கடற்கரைப் பகுதியையும் சேர்த்தால், ஆயிரம் பேருக்கு ஓர் ஏக்கர் வருகிறது. ஆனால் ஆயிரம் பேருக்கு 4 முதல் 7 ஏக்கர் வரை திறந்த வெளி இடங்கள் விடப்பட வேண்டும் என்பது நியதி. இருக்கின்ற அற்ப சொற்ப திறந்த வெளி இடமும் இப்போது மேலும் குறைந்து வருகிறது. காரணம், ஒருபுறம் ஜனத்தொகை அதிகரிப்பு. இன்னொருபுறம் நில ஆக்கிரமிப்பு.

''முன்பெல்லாம் நில உபயோகத்தை ஒன்றிலிருந்து இன்னொன்றுக்கு மாற்றுவதானால் பெருநகர் வளர்ச்சிக் குழு அந்தப் பகுதியில் உள்ள பொது மக்களுக்கு, பதிவுத் தபாலில் கடிதங்கள் அனுப்பி ஆட்சேபணைகளைக் கருத்தில் கொள்ளும். இப்போது ஒரு விளம்பரம் பொதுவாகப் போட்டு விடுகிறது. எத்தனை பேர் கவனிக்கிறார்கள்?

''சரி ஒரு திறந்த வெளி இடத்தைக் கட்டடங்கள் அல்லது தொழிலகங்களுக்கு எடுத்துக் கொண்டால், வேறு மாற்று இடமாவது திறந்த வெளி இடமாக ஒதுக்கி அறிவிக்க வேண்டாமா? அதுவும் இல்லை.

''இப்படி நில உபயோகத்தில் மாற்றம் செய்வதை நான் அறவே வெறுக்கிறேன்; ஆட்சேபிக்கிறேன். மாற்றுவது எனில் பெருநகர் வளர்ச்சிக்குழு ஏற்கெனவே வகுத்து, அறிவித்த திட்டம் என்ன ஆவது? அவர்களுக்கே அவர்கள் செயல்பாட்டில் நம்பிக்கை இல்லை என்பதே அர்த்தம்!

''வெளிநாட்டிலிருந்து இங்கே முதலீடு செய்பவர் மீதோ, வேறு எந்தத் தனிப்பட்டவர் மீதோ எனக்கு எந்தக் காழ்ப்புணர்வும் இல்லை. வளராது பின்தங்கிவிட்ட பகுதிகளில் இவர்கள் கேளிக்கை உலகு அமைக்கலாமே? விமானக் கூடம் அருகே ஓட்டல் கட்டலாமே?''

இது விஷயமாக ஆளுனரின் ஆலோசகரிடம் பொது மக்கள் ஓர் உரையாடல் நிகழ்த்தியதாக அறிகிறோம்.

சுற்றுப்புறச் சூழலில் அக்கறை கொண்ட, ஒரு சங்கத்தின் உறுப்பினர்கள் வெகு தீவிரமாக இதில் அக்கறை எடுத்துக் கொண்டு பேசியிருப்பதாகவும் தெரிகிறது. இந்த முயற்சிகள் எல்லாம் வெற்றி காண வாழ்த்தும் அதே நேரத்தில் —

மேற்படி நிலத்தில் பழைய கட்டிடத்தை இடிக்க கார்ப்பரேஷனுக்குக் கட்ட வேண்டிய தொகையைக் கட்டி, அனுமதி பெறு முன்னரே, இடிக்கும் பணிகள் துவங்கி விட்டதாகவும்;

ஜானகி ஆட்சியின் 23 நாளிலேயே, ஜேப்பியார் மூலம் தண்ணீர் சப்ளைக்கு ஏற்பாடு செய்து, தண்ணீர் இங்கே மட்டும் தாராளமாகக் கிடைப்பதாகவும்;

காம்பவுண்டு சுவர் கூட எழுப்பப்பட்டு வருவதாகவும்; அறிகிறோம்.

பொது மக்கள் நலனில், ஆரோக்கியத்தில், துளியேனும் அக்கறை இருக்கும் பட்சத்தில், மேற்படி பொதுவிடத்தைப் பொது மக்களுக்கே விட்டுக் கொடுத்து ஒதுங்கிக் கொள்ள பல்லவா ஓட்டல் கார்ப்பரேஷன் தானாக முன் வரும் என்று எதிர்பார்ப்போம்!

புகைப்படங்கள்: **கே. வி. ஆனந்த்.**

''பாங்க் மானேஜர் ஏன் இப்படி சுத்தறாரு...?''

''யாரோ ஒரு அரசியல்வாதி ஓட்டுக்குப் பணம் கொடுக்கணும், கடன் வசதி உண்டான்னு கேட்டாராம்!''

— குத்தாலம் அபிதா.





சென்னை கெயிட்டி A/c
தினசரி 4 காட்சிகள்
ஈகா A/c
ஸ்ரீ கிருஷ்ணா
நூர்ஜஹான்
தினசரி 3 காட்சிகள்
வசந்தி A/c
ஸ்ரீ பிருந்தா A/c
பகல் காட்சி
மற்றும் தமிழகமெங்கும்
சத்யஜோதி பிலிம்ஸ்
வழங்கும்
அசோககுமார்
கங்கைஅமரன்
A.L. நாராயணன்
B.லெனின்-V.T.விஜயன்
விக்ரம் தர்மா சுந்தரம்
ஜீவா
A
பிரதாப் போத்தன்
G. தியாகராஜன்
G. சரவணன்
ELEGANT

வட்ட மேஜை

# தலையங்கம் அல்ல: எதிர்க்கட்சிகளின் குரல்

* காவடி எடுப்பதன் இதிகம் புரியாமல் இருந்து வந்த, என் போன்ற பலருக்கு, கவர் ஸ்டோரி மூலம், காவடி எவ்வாறு வந்தது என மிகத் தெளிவாகப் புரிந்தது. மேலும் லதாவின் வண்ண ஓவியம் தானாகக் கன்னத்தில் போட்டுக் கொள்ள வைத்தது!

குத்தாலம், எஸ். ராஜா.

* பழனி மலைக் கோபுரமும் அழகிய முருகன் திருவுருவும், பக்திப் பரவசத்தோடு காவடி தூக்கும் மழலை மாறாக் குழந்தையின் புகைப்படமும் கொண்ட அட்டைப் படம் கல்கியின் அழகிற்கு அழகு சேர்த்தது.

சிங்காரப்பேட்டை, என். சங்கர்.

* திறமைமிக்க பெண் கிரண் பேடியின் பேட்டி படித்தேன். இன்று லஞ்ச ஊழலுக்கும் அரசியல்வாதிகளின் அட்டகாசங்களுக்கு ஆதரவு கொடுத்தும் பயந்து நடுங்கிக் கொண்டிருக்கும் ஆண் போலீஸ் வர்க்கத்துக்கு இந்தப் பேட்டியைப் படித்தவுடனாவது புத்தி வரட்டும். அதற்காக இந்தப் பேட்டியை மிகப் பெரிய போஸ்டர்களில் அச்சடித்து ஒவ்வொரு போலீஸ் ஸ்டேஷனிலும் ஒட்டினாலும் தகும்.

மதுக்கரை, ப. கணேசன்.

* 'ஒரு நேர்மையான, லஞ்ச ஊழலற்ற சமுதாயத்தை உருவாக்க, நேர்மை தவறாமல் நியாயமான பாதையில் மக்களை வழி நடத்திச் செல்ல, ஒரு சிறு குழுவினர் அயராமல் பாடுபட்டால் கூடப் போதும்; நம்மால் அப்படிப்பட்ட சமுதாயத்தை உருவாக்க முடியும்' என்பது உண்மையே. அதற்கு ஒத்துழைக்க நாங்கள் தயாராய் இருக்கிறோம்.

காரைக்குடி, எஸ். தர்மாபதி.

* 'தேர்தலைத் தாமதிக்காதே! ஜனநாயகத்தை அவமதிக்காதே!' இந்திய மக்களின், குறிப்பாக இந்திய எதிர்க் கட்சிகளின் ஒட்டுமொத்தக் குரலை எதிரொலித்திருந்த கருத்துமிக்க தலையங்கம்.

தோட்டக்குறிச்சி, இரா. வளையாபதி.

* ஆளுனர் ஆட்சியே நீடிக்க வேண்டும் என்று பிதற்றும் அரசியல் அரைவேக்காட்டாளர்களுக்குத் தங்கள் தலையங்கம் சரியான சவுக்கடி. தேர்தலை ஒத்தி வைத்து ஜனநாயகத்தை அவமதிக்கும் நியாய விரோதத்தை அழகாகச் சுட்டிக் காட்டி எச்சரித்ததற்கு நன்றி!

விக்கிரபாண்டியம், ஆர். கே. அருள் செல்வன்.

* ராஜீவ் காந்தி தமிழக சுற்றுப் பயணம் செய்த போது கூட, கவர்னர் ஆட்சிக்குப் புகழாரம் சூட்டிச் சென்றுள்ளார். உங்கள் தலையங்கம் டெல்லியில் உள்ளவர்களுக்கு உரைக்க வேண்டுமே!

கோவை, ஜெய கோபால்.

* ஆளுநர் ஆட்சியே என்றென்றும் நீடிக்க வேண்டும் என்று யாரும் சொல்லவில்லையே! (அப்படிச் சொன்னால் அது பைத்தியக்காரத்தனம்) ஆளுநர் ஆட்சியில் கோப்புகள் விரைவில் தீர்க்கப்பட்டு, அரசாங்க அலுவல்கள் துரிதமாக நடைபெறத் தொடங்கியுள்ளன. சீர்திருத்தி வரும் நிலைமை ஸ்திரமடைய இன்னும் ஓர் ஆறு மாதங்களுக்கு ஆளுநர் ஆட்சி நீடிக்கலாம் என்று தான் கூறுகிறார்களே தவிர தேர்தலே நடத்தக் கூடாது என்பதல்ல.

முத்துப்பேட்டை, க. நாகலிங்கம்.

* இந்த வாரக் கல்கியில் என்னைப் பெரிதும் கவர்ந்தவை, தமிழன்பனின் ஒரு பக்கக் கவிதையும், கே. வி. ஆனந்தின் அட்டகாசமான புகைப்படம் மற்றும் லதாவின் பழனி ஆண்டவர் ஓவியமும்தாம்.

வேலூர், டி. கே. பாஸ்கரன்.

* தமிழன்பனின் 'பிழைபடாத காலமும் நரைதொடாத இயற்கையும்' காலப் பருவத்தைப் பார்க்கும் கண்ணாடியாக அமைந்திருந்தது. இதயத்திற்கு ஒத்தடம் கொடுத்த அந்த இனிய கவிதைக்கு, விழிகளுக்கு ஒத்தடம் கொடுத்த அழகிய வண்ணப் படம் மேலும் மெருகூட்டியது.

திருவாய்மூர், கவிஞர் ஆரூர் அமுதா.

* விருப்பு வெறுப்பின்றிக் கூட்டல் குறைச்சல் இல்லாமல், உள்ளதை உள்ளபடி விமர்சனம் செய்து, ஏற்றத் தாழ்வு ஏதுமின்றி எழுதப்பட்டது, 'தி. மு. க. வில் பிளவா?' என்னும் கட்டுரை.

சென்னை — 39, சி. தெ. இளமுருகன்.

* தி.மு.க.வில் பிளவு ஏற்பட்டது உண்மைதான். அதை மறைத்துச் சம்பந்தப்பட்டவர்கள் சப்பைக் கட்டுக் கட்டிக் கொண்டிருக்கிறார்கள் என்பது உண்மையே.

மேலகிருஷ்ணன்புதூர், அர். கே. லிங்கேசன்.

* 'கருணாநிதிக்கு ஜால்ரா போடுகிறீரா' எனும் கேள்விக்குத் தராசு'வின் பதில் நடுநிலையாளர்கள் அனைவரும் ஏற்றுக் கொள்ளும்படி இருந்தது. தட்டிக் கொடுக்க வேண்டிய செயல்களைத் தட்டிக் கொடுத்துச் சுட்டிக்காட்ட வேண்டிய தவறுகளைச் சுட்டிக்காட்டுவதே நடுநிலைமையான பத்திரிகையின் தார்மீகக் கடமை. இதில் ஜால்ரா எனும் பேச்சுக்கே இடமில்லை என்பது, சிந்திக்கத் தெரிந்தவர்களுக்குப் புரியும்.

சென்னை — 15, எஸ். அருண்குணா.

* எதற்கெடுத்தாலும் திருவுளச் சீட்டின் முடிவை எதிர்பார்ப்பது எத்தனை பெரிய முட்டாள்தனம் என்பதை அழகாகச் சித்தரித்தது கஜனின் 'திருவுளச் சீட்டு' சிறுகதை! பாராட்டுக்கள்!

திருச்சி — 5, எம். காமராஜ்.

* 'ஓர் உதயத்தின் பொழுது' சிறுகதையில் என்னதான் தான் பாதிக்கப்பட்டாலும் தாயுள்ளம் ஒருபோதும் பழி தீர்க்க எண்ணாது என்பதை அழகாகச் சித்திரித்திருந்தார் கதாசிரியர் 'விவேக்'. அதிலும் 'இந்த உதை உதைக்கிறதே இது.... ஆணா..... பெண்ணா.....? ஆணோ, பெண்ணோ ஓர் ஆசீர்வாதம்!' என்ற வரிகள் கவிதை.

சென்னை — 71, எம். ஐ. முஹம்மத் லத்தீப் ராஜா.



# உங்கள் திறமையைப் பிரதிபலிக்கச் செய்வது உங்கள் சமையல் பாத்திரங்கள்.



நான் உபயோகிப்பது...

உயர்ந்த தரமான
பாத்திரங்களுக்கான
இந்திய அரசின்
தேசிய விருதினைப் பெற்றது.

# காளி

## காப்பர்-பாட்டம்

ஸ்டெயின்லெஸ் ஸ்டீல்
பாத்திரங்கள்

38 வருட சிறந்த அனுபவம் பளிச்சிடுவது

ISI முத்திரை பெற்றது.

**காளி: கவர்ச்சியானது மட்டுமல்ல. சிக்கனமாயும் சீக்கிரமாயும் சமைக்கவல்லது.**

விற்பனை ஏஜெண்ட்: ஸ்ரீவித்யா ஏஜன்சீஸ், கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம் 612 001. போன்: 20136.
விற்பனை ஷோரூம்: ஸ்ரீ M.V.M. ஸ்டோர்ஸ், கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம் 612 001. போன்: 20136.
மண்டல ஏஜெண்டுகள்: சம்மு & கோ., த.பெ.எண். 3622, மகாத்மா காந்தி ரோடு, எர்ணாகுளம், கொச்சின் 682 035. போன்: 361139.● விக்டரி மெட்டல்ஸ், 101, கேத்வாடி மெயின் ரோடு, பம்பாய் 400 004. போன்: 354507/380075.
● தினேஷ் எண்டர்பிரைசஸ், 41/1942, நயிவாலா, கரோல்பாக், புதுடில்லி 110 005. போன்: 5716923.

ADWAVE/KBS/3428 TAM A

# டெலிபோனில் ஒரு தேவதை

டெலிபோன் மணி அடித்தது. எடுத்தேன்.

''85353 — தானே?'' எனக் கேட்டது ஒரு குயில். அதாவது கேட்ட குரல் அத்தனை இனிமையாக இருந்தது.

''நோ! இது 48321!' எனக்கூறி ரிஸீவரைப் 'பட்' என்று கீழே வைத்தேன்.

இரண்டு வினாடிகள்தான் ஆகியிருக்கும். மீண்டும் டெலிபோன் மணி.

மறுபடியும் குயில் — அதே குயில்தான் கூவியது.

''ராங் - நம்பர்!'' என்றேன் சற்று எரிச்சலுடன். ''ஐ ஆம் வெரி ஸாரி, ஸார்! நான் என்னவோ சரியாகத்தான் 'டயல்' செய்கிறேன்.''

''டெலிபோன் எக்ஸ்சேஞ்சைக் கூப்பிட்டுப் புகார் செய்யுங்கள், மேடம்!''

''அது கிடைத்தால்தானே! டெலிபோன் எக்ஸ்சேஞ்சைக் கூப்பிட்டால் எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச் கிடைத்தாலும் கிடைக்கும்!'' எனச் சிரித்தாள் அவள்.

நானும் பதிலுக்குச் சிரிப்பது போல் பாவனை காட்டிவிட்டு ரிஸீவரைக் கீழே வைத்தேன்.

மறுபடியும் டெலிபோன் மணி.

எடுத்தவன் நானே முந்திக் கொண்டு, ''நாலு, எட்டு, மூணு, இரண்டு, ஒன்று!'' என்றேன்.

''என்ன ஸார் இது! எத்தனை தரம் டயல் செய்தாலும் உங்கள் நம்பர்தான் கிடைக்கிறது.''

''என் தலைவிதி!'' என்றேன் நொந்தபடி.

''ஐ ஆம் வெரி ஸாரி... மூன்று தரம் உங்களுக்குத் தொந்தரவு கொடுத்துவிட்டேன்... என்னை மன்னித்துக் கொள்ளுங்கள்!''

''இல்லை மேடம்! நான்தான் கொஞ்சம் கோபமாகப் பேசிவிட்டேன்.''

''நீங்கள் பரவாயில்லை, ஸார். சில பேர் தப்பாக டயல் செய்தால் எப்படி வேட்டை நாய் மாதிரி 'சள்'ளென்று எரிந்து விழுவார்கள், தெரியுமா?''

**அன்னம்**

''அப்படியானால் நான் சாதாரணமான நாய் என்கிறீர்களா?'' என்றேன் விஷமமாக.

அவள் சிரித்தாள்.

''ஆமாம்... நீங்கள் எங்கிருந்து பேசுகிறீர்கள்?... நான் தெரிந்து கொள்ளலாமா?''

''இங்கேதான் ஸார்! அடையாறிலிருந்து... என் பெயர் யசோதா... அப்பா கூப்பிடறது கண்ணம்மா. அம்மா கூப்பிடறது குட்டிப் பிசாசு. வயது இருபத்து மூணு. படிப்பு பி.எஸ்.ஸி.. சப்ஜெக்ட் பாடனி. காலேஜ் எத்திராஜ்.. எடை நாற்பத்தி நான்கு கிலோ. உயரம் 155 சென்டி மீட்டர்....''

''அடிக்கடி வேலைக்கு விண்ணப்பம்





போடறீங்களா?... இத்தனை சரளமா வருதே?''

''என்ன ஸார் நீங்க... நான் என் வயசைச் சொன்னப்புறம் கூட, நீங்க, தாங்கன்னு சொல்றீங்க?''

''ஏன் மேடம்... உங்களை விட நான் சின்னவனாயிருக்கலாம் இல்லையா? போனில் என்ன, என் முகமா தெரியுது?''

''முகம் தெரியா விட்டால் என்ன? குரல் போதாதா?''

''ஓஹோ! குரலை வைத்துக் கொண்டு ஆளை எடை போடும் சக்தி உங்களுக்கு... ஐ ஆம் ஸாரி... உனக்கு இருக்கிறதா?''

''நீங்களே சரிபார்த்துக் கொள்ளுங்கள்... சொல்லட்டுமா?''

''உம்...''

''பெயர் தெரியாது.''

"என் பெயர் தெரியாது இல்லை. ராகவன்."

"அறுக்காதீங்க ஸார்! எனக்குத் தெரியாதுன்னு சொன்னேன். வயது இருபத்தைந்துக்கு மேலே.... முப்பத்தைந்துக்குள்ளே...!"

"கரெக்ட்... முப்பத்தி ஒன்று."

"எடை கிட்டத்தட்ட எழுபது கிலோ."

"அறுபத்தெட்டு. டாக்டர் எட்டு கிலோ குறைக்கச் சொல்கிறார்."

"உயரம் கிட்டத்தட்ட நூற்று எண்பது சென்டிமீட்டர்."

"நூற்று எழுபத்தைந்து."

"உங்களுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது."

"அது கூடக் குரலிலிருந்து தெரியுமா, என்ன?"

"இது ஜோஸ்யம் இல்லை. நடைமுறை வாழ்க்கை. உடல் ஊதிவிட்டது என்றால் வக்கணையாகச் சமைத்துப் பார்த்துப் பார்த்துப் போட ஒருத்தி இருக்கிறாள் என்று அர்த்தம்."

"அது சரி... போன வருஷம் கல்யாணம்... இப்போது மனைவி இங்கு இல்லை."

"வாழ்த்துக்கள்!"

"எதற்கு?"

"நீங்கள் தந்தையாகப் போகிறதற்கு."

"தப்பு... தந்தை ஆகி விட்டேன். பெண்ணுக்கு இரண்டு மாதம் ஆகிறது..."

"உங்களுக்கு இத்தனை அவசரம் என்று எனக்குத் தெரியவில்லை."

"உண்மையிலேயே நீ கெட்டிக்காரப் பெண்தான். பதிலுக்கு நான் ஒரு ஜோஸ்யம் சொல்லட்டுமா?"

"உம்..."

"நீ கூப்பிட்ட நம்பரில் உனக்கு ரொம்ப வேண்டியவர் ஒருவர் இருக்கிறார்."

"வேண்டியவர் என்றால்...?"

"அதாவது ரொம்ப, ரொம்ப நெருங்கியவர்."

"மண்ணாங்கட்டி... அந்த நம்பர் காஸ் ஸிலிண்டர் கம்பெனியுடையது. காஸ் தீர்ந்து போய் இருபது நாட்கள் ஆகின்றன. இன்று கூப்பிட்டு ஒரு டோஸ் விடலாம் என்றால் நீங்கள் மாட்டிக் கொண்டீர்கள்."

"சே... சொன்னது ஒரு ஜோஸ்யம்... அதுவும் தப்பா?"

"ஒவ்வொரு தப்பும் வெற்றிக்கு அழைத்துச் செல்லும் முதல் படி... உங்களுடன் பேசிக் கொண்டிருந்தால் நேரம் போவதே தெரியாது போல் இருக்கிறது."

"எனக்கும் அப்படித்தான்."

"அப்படியானால் நாளைக்கு என் வீட்டிற்கு வாருங்களேன்... பேசிக் கொண்டிருக்கலாம்."

"என்னையா கூப்பிடுகிறாய்?"

"ஆமாம். தைரியமாக வாருங்கள்... எங்கள் வீட்டில் அல்சேஷன் கிடையாது. கூர்க்கா கிடையாது."

"வருகிறேன்... விலாசம்?"

சொன்னாள். குறித்துக் கொண்டேன்...

"முக்கியமாக ஒரு விஷயம்."

"என்ன?"

"பெண்டாட்டி ஊரில் இல்லை. நான் தனியாகத்தான் இருப்பேன் என்றெல்லாம் தப்புக் கணக்குப் போட்டுக் கொண்டு வராதீர்கள்... என் அப்பா ரிடையர்ட் போலீஸ் இன்ஸ்பெக்டர். இன்னமும் தினமும் காலையிலே கர்லாக் கட்டை சுத்தறார்."

"நோ! நோ... ஒரு நண்பன் என்ற முறையில்..."

"அதே முறையில்தான் நானும் கூப்பிட்டிருக்கிறேன். மாலை ஆறு மணி... நாங்கள் காத்திருப்போம்!"

அவள் ரிஸீவரை வைத்து விட்டாள்.

என் மனம் எனக்கு வாய்த்தவளைப் பற்றி எடை போட்டது! சீதாவிடம் பேசுவதும் ஊமையுடன் பேசுவதும் ஒன்றுதான். எப்போதாவது எண்ணி இரண்டு மூன்று வார்த்தைகள். 'உம்' என்றால் சம்மதம். தலையை ஆட்டினால் மறுப்பு.

இந்தப் பெண்தான் என்ன கலகல......

மறுநாள் மாலை என் வீட்டைப் பூட்டிக் கொண்டு புறப்பட்டேன்.

சே! வெறும் கையை வீசிக் கொண்டா போவார்கள். அரை டஜன் ஆப்பிள், அரைக் கிலோ ஹைதராபாத் திராட்சை, மற்றும் கொஞ்சம் மல்லிகைப் பூ வாங்கிக் கொண்டேன்.

அடையாறில் எத்தனையோ 'நகர்'கள் இருக்கின்றன. ஆனால் இவள் சொன்ன ஜான்ஸிராணி நகர் யாருக்குமே தெரியவில்லை. நகர் தெரிந்தால்தானே, அப்புறம் மூன்றாவது கிராஸ் ரோடு, அதில் எட்டாம் நம்பர் வீடு எல்லாம்...?

சரியான போக்கிரிப் பெண்... தப்பான விலாசத்தைக் கொடுத்து அலைய வைத்திருக்கிறாள். டெலிபோன் பண்ணிப் பார்க்கலாமா?" அடடா! வீட்டு விலாசம்தான் வாங்கிக் கொண்டேன்... டெலிபோன் நம்பர் சொல்லவில்லையே!

வீடு திரும்பினேன்.

வாயிற்கதவு தொட்டவுடன் திறந்து கொண்டது.

உள்ளே அலமாரிகள், பீரோக்கள், சூறையாடப்பட்டு இருந்தன.

நகைகள், வெள்ளிச் சாமான்கள், ரொக்கம், டேப் ரிகார்டர் என்று அனைத்தும் அம்போ...

என்ன செய்வது என்று புரியவில்லை. போலீஸுக்கு டெலிபோன் செய்யலாம் என டெலிபோனை எடுத்தேன். அதனடியில் ஒரு சின்னத் துண்டு.

அதில் 'நன்றி — யசோதா' எனக் குறித்திருந்தது.

டெலிபோனில் பேசியது தேவதை என நம்பினேன். அது பிசாசு என இப்போது புரிந்தது.

Bisleri CLUB

ஆர். ஓ எனும் நவீன சுத்திகரிப்பு முறையால், குடிதண்ணீரை மறுபடி சுத்தம் செய்து தயாரிக்கும் சோடா

# "Bisleri Club Soda"

சுத்தமான முறையில் தகுந்த பாதுகாப்போடு,
சிறந்த மேற்பார்வையில்
தயாரிக்கப்படுகிறது.

## "பிஸ்லேரி கிளப் சோடா"




தயாரிப்பாளர்:

சென்னை பாட்லிங் கம்பெனி லிமிடெட்,
423, பூந்தமல்லி நெடுஞ்சாலை,
சென்னை — 600 106.

தொ. பே. 420440, 420755, 425150.

200 கோடி ரூபாய் புழக்கமுள்ள சக்தி குழுவின் ஓர் அங்கம்.

# யார் அவன்?

ஜனார்த்தனன் விஸ்வம் சொல்வதையெல்லாம் பொறுமையுடன் கேட்டான். பிரச்னையின் ஆழத்தை உணர்ந்து கொள்ள முயலுபவன் போலக் கண்களை மூடி யோசித்தான். பின்னர் இயல்பான புன்னகையை வரவழைத்துக் கொண்டு வினவினான்.

''ஸோ வாட்.....''

ஆழ்ந்த அனுதாபத்தையும் ஆதரவான வார்த்தைகளையும் எதிர்பார்த்த விஸ்வத்திற்கு ஏமாற்றமாக இருந்தது.

தனது பிரச்னைகளை இவனிடம் கொண்டு வந்திருக்கக் கூடாது. கல்யாணமாகாதவன். அழகிய இளம் மனைவி அளிக்கும் வேதனையை உணர முடியாதவன். மனத்தைத் திறந்து காட்டியிருக்கக் கூடாது. தன்னைப் போன்று வேதனைக்கு ஆளாகும் வரை இப்படித்தான் கேள்வி கேட்க முடியும். இவனது புத்தக அறிவு தனக்கு உதவக் கூடும் என்று நம்பி வந்தது பெரும் தவறு.

''என்ன யோசனை... காப்பி ஆறுது!'' — கப்பை கீழே வைத்தபடி ஜனா கேட்டான்.

''காப்பி எனது பிரச்னை இல்லை'' என்றான் விஸ்வம்.

''இன்பேக்ட்.....காப்பிதான் இப்போதைக்குப் பிரச்னை. அதுதான் எதிர்ல இருக்கிற உண்மை. ஆறிப் போகுதுடா....''

''உன்னால குரூரமா இருக்க முடியுங்கிறதுக்கு இது உதாரணம்....''

''தேங்க்ஸ்... மனைவியின் மேலுள்ள கோபத்தைக் காப்பியை ஆற வைத்துக் குடிக்கிறதன் மூலம்தான் தணிக்கக்க முடியும்னு நினைக்கிற முட்டாளை நான் தடுக்க முடியாது.''

''நீ புத்திசாலிதான்.....''

விஸ்வம் காப்பி கப்பைக் கையில் எடுத்துக் கொண்டான். ஆறிப் போயிருந்தது.

உண்மையில் இதுதான் பிரச்னையா? எதிரிலிருக்கிற உண்மையைப் புறக்கணித்து, மனத்தைச் சங்கடப்படுத்திக் கொள்வதுதான் தனது இயல்பா?

ஜனாவின் சித்தாந்தம் தன் மீதும் படிவதைக் கண்டு, 'சட்'டென்று உதறினான்.

**மும்தாஜ் யாசின்**

எல்லா இளைஞர்களையும் போலவே நிறையக் கனவுகளுடன்தான் அவனும் கல்யாணம் பண்ணிக் கொண்டான்.

பத்மா குறை சொல்ல முடியாத அழகு. அவனோடு ஒப்பிட்டால் அவள் இன்னும் சிவப்பு. நிமிர்ந்துப் பிடித்த மாதிரி உடல் வாகு.

வாழ்க்கை அற்புதமாக இருந்தது. உபசரிப்புகள், கலகலப்பு, கேலிகள், அவனையும், அவளையும் நெருங்கச் செய்யும் சடங்கு சம்பிரதாயங்கள்....

முதன் முறையாக மாமனார் ஊருக்கு அழைத்துப் போயிருந்தார்கள்.

வாழ்க்கையின் புதுத் துவக்கத்திற்குப் பிறகு பத்மா சந்திக்கிற அதே சூழ்நிலை, உறவுகள், சிநேகிதங்கள். சொந்த மண்ணிற்குரிய உணர்வுகள் சற்று அதிகமாகவே தலைதூக்கி இருந்தன. சந்தோஷம் நிலை கொள்ளாமல் இருந்தது. ஒரே நாளில் தான் சம்பந்தப்பட்ட எல்லாவற்றையும் அவனுக்குக் காட்டி வருவதைப் போல, ''இதான் நான் படிச்ச ஸ்கூல் — இதான் சின்ன வயசுல புளியங்காய் பறிச்ச அந்தத் தோப்பு — இவங்கதான் என் சிநேகிதங்க — குண்டுமச்சருக்குப் பேர் வச்சோம்னு சொன்னனே.... இதான்......''

இயல்பாக, நளினமாக 'நீ என்னுடைய மனுஷனல்லவா!' என்கிற உணர்வுடன் அர்த்தமில்லாமல் அவள் பேசியதெல்லாம் கூட விஸ்வத்தை ரொம்பவும் சந்தோஷித்தது. பதிலுக்கு 'நீயும் எனது மனுஷியல்லவா' என்று எண்ண வைத்தது.

கேளிக்கை, பொழுது போக்குகளுக்குக் கூடக் குறைவில்லை. ஒவ்வொரு நொடியையும் சாஸ்வதமாக்கிக் கொள்கிற மாதிரி அவளைச் சீண்டி, சிரித்து, சினிமா, கோவிலுக்குப் போய்.... உறவினர் வீடு, கடை வீதி என அலைந்து....

நான்காம் நாளன்றுதான் அவனது கனவுகள் மட்டுமல்ல, நிஜங்களும் உடைந்து போயின.

மதியச் சாப்பாட்டிற்குப் பிறகு, படிக்கப் புத்தகம் தேடிய போது, அவளது அலமாரியில் அந்தக் கடிதம் தென்பட்டது. ஏதோ ஒரு பண்டிகைக்கு வந்த வாழ்த்துச் செய்தி. 'டியர்' என ஆரம்பித்துச் சுருக்கமான வாசகங்கள். கீழே 'வித் லவ்'—வுடன் சுரேஷ் என்ற கையொப்பம்.

பொட்டில் அறைந்த மாதிரி இருந்தது.

யாரிவன்? பத்மாவை டியர் என்று அழைக்க உரிமை கொண்டவன்? இவனுக்கும் அவனுக்கும் என்ன சம்பந்தம்?

சுரேஷ்.....

மனம் சுற்றிச் சுற்றி வந்தது.

பத்மாவிடம் கேட்கலாமா? பதில் சொல்வாளா? அண்ணன் தம்பி உறவுக்காரனாக இருந்தால், 'ச்சீ.....' என்று நினைக்க மாட்டாளா?

கடிதத்தை எடுத்த இடத்திலேயே வைத்தான். பத்மாவிடம் மெல்லப் பேச்சக்

கொடுத்துப் பார்த்தான். அவளது சொந்தத்தில், உறவுகளில் யாருக்குமே அந்தப் பெயர் இல்லை என்று தெரிந்தது. அச் சமயத்தில் தன் மனத்தை அடக்கிக் கொண்டான்.

ஆனால் அடக்க அடக்கச் சந்தேகம் பூதமாக வளர்ந்தது. நெஞ்சில் முள் குத்தியது. அவனே முயன்றாலும் அகற்ற முடியாததாய் வலித்தது.

சுரேஷ்..... யாரவன்?

தனது கேள்விக்குப் பதில் கிடைக்காததற்கு மட்டுமல்ல. கிடைத்து விடுமோ என்பதற்காகவும் அவனுக்குப் பயம் வந்தது. தன்னை நரகத்தில் தள்ள வந்திருக்கும் துஷ்ட தேவதையாகப் பத்மா தோன்றினாள். வாழ்க்கையில் கூட விரக்தி. இட்டு நிரப்ப முடியாத சூன்யம் கவிழ்ந்ததாய்த் தங்களை இணைக்கும் சூட்சுமம் இற்றுப் போனதாய்...

ஊருக்குத் திரும்பியதும் நிலைமை இன்னும் மோசமாயிற்று.

அவளைப் பார்க்கவே பிடிக்கவில்லை. பேசினால் கோபம் வந்தது. நெருங்கினால் கெட்ட வாசனை வருவது போலிருந்தது.

''மாமனார் வீட்டுக்குப் போனவன் அதுக்குள்ள ஏன் வந்துட்டே?''

''முகம் ஏன் இப்படி வாடிப் போயிருக்கு?''

''என்னடா விஷயம்... ரெண்டு பேரும் பேசிக்க மாட்டீங்கறீங்க?''

கேள்விகள்...... கேள்விகள்.....

ஆபீஸில், வீட்டில் தெரிந்த முகங்களுக்கு மத்தியில்......

ஜனா — நெருங்கிய சிநேகிதன் — அவனுடைய மாற்றத்தை எப்படியோ கண்டுபிடித்திருந்தான். ''இதுதான்.... இதுதானா'' என்று கேள்விகள் கேட்டு, விடைக்கு மிகவும் நெருங்கி வந்து நின்றான். விஸ்வத்திற்கு அவனிடம் எதையும் மறைக்க முடியவில்லை. வயதுக்கு மீறிய ஞானம். எதையும் கண்டுபிடித்துவிடும் புத்திக் கூர்மை. பிரச்னைகளை — அவை பிரச்னைகள் என்கிற அளவில் புரிந்து கொள்கிற கண்ணியம், அவனிடமிருந்து என்ன கிடைக்கும் என்று தெரியாமலேயே தன்னை ஒப்படைக்கத் தோன்றியது.

அது தவறோ? இது உன் பிரச்னை. நான் என்ன செய்ய முடியும் என்று சொல்லப் போகிறானோ? தொடர்பில்லாமல் கேள்விகள் கேட்பதற்கு அதுதான் அர்த்தமோ?

**ஹோ**ட்டலை விட்டு வெளியே வந்ததும், ''சினிமாவுக்குப் போகலாமா?'' எனக் கேட்டான் ஜனா.

''உன்னிடம் வந்தது தப்புன்னு நினைக்கிறேன்.''

''தமிழ்ப் படமே போகலாம். உனது சோக மனநிலைக்குப் பொருத்தமா இருக்கும்.''

''ஜனா..... ப்ளீஸ்......''

''ஏண்டா இப்படி இருக்கே? இப்ப என்ன ஆயிடுச்சு... ம்?''

''.........''

''குட்......வா.... பேசிக்கிட்டே பார்க் போவோம்....''

அவனது பதிலுக்குக் காத்திராமல் பெட்டிக் கடைக்குச் சென்று சிகரெட் வாங்கி வந்தான்.

பற்ற வைத்துக் கொண்டு மெதுவாக நடந்தார்கள். பார்க்கில் சந்தடி இல்லாத ஒரு பகுதியில் அமர்ந்தார்கள்.

வழக்கத்தை விடக் கூட்டம் அதிகமாக இருந்தது. மாதக் கடைசியில் வேறு பொழுது போக்குகளுக்குக் கதியற்று இயற்கையை 'ரசிக்க' வந்த கூட்டம். குழந்தைகள், பிஞ்சு நடையில் பெண்கள். பூ வாசனை, பட்டாணி, சுண்டல், மொசு மொசுக்கிற புல்தரை....

வாழ்க்கையில் அன்னியப்பட்டவன் போல வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த ஜனா திடீரென்று பேசினான்.

''அங்க பார்த்தியா.... அந்தக் கறுப்புக் குருவி எவ்ளோ அழகா இருக்கு....''

''குருவி எனது பிரச்னை இல்லை....'' என்றான் விஸ்வம்.

''இதுவும் ஒரு பிரச்னைதான்.... அங்கே பாரேன்.....''

ரொம்பவும் சின்னக் குருவி. பெயர் தெரியவில்லை. அவ்வளவு பெரிய பூங்காவில் தனது கூட்டைத் தவற விட்டது போலிருந்தது. இங்கும் அங்கும் பறந்து அலைந்தது. தங்களது மரத்தில் அமர விடாமல் மற்ற பறவைகள் கொத்தி விரட்டிக் கொண்டிருந்தன.

''சுயநலம் எல்லா உயிரினத்துக்கும் பொதுவானது போலும். முதல்ல இடம் பிடிச்சுட்டதால மரம் தங்களுக்கே சொந்தம்னு அந்தப் பறவைகளும் நினைக்கிற மாதிரி இல்லே?.....''

விஸ்வம் நெளிந்தான்.

''ஏன்..... நாம கூட அப்படித்தான்... என்ன?''

''தெரியாது. வேணும்னா குருவிக்கு ஒரு கூடு கட்டிடலாம். என்னை விட்டுடு....''

ஜனா பெரிதாகச் சிரித்தான். ''இப்பத்தான் நீ என் சிநேகிதன்'' என்றான்.

இறுக்கம் சற்று தளர்ந்தது மாதிரி இருந்தது.

''லெட்டரைப் பார்த்ததும் உனக்கு ஏன் வேறு விதமா யோசிக்க முடியலை? உறவுக்காரங்களோ, செக்ஸ் சம்பந்தப்படாத சிநேகிதனோ ஏன் எழுதி இருக்கக் கூடாது?'' ஜனா ஆரம்பித்த இடத்திற்கே மீண்டும் வந்து நின்றான்.

''இருக்காது ஜனா. மனத்துக்கு மட்டுமே புரியற விஷயம் இது. நிச்சயமாக இல்லை....'' என்றான் விஸ்வம்.

ஜனா இலேசாகப் புன்னகை செய்தான்.

''ஒரு வகையில் ரொம்பப் பெரிய விஷயம். இன்னொரு கோணத்துல ரொம்பச் சின்ன விஷயம்.....''

விஸ்வத்திற்குப் புரியவில்லை. புரியாத

படி. அவன் பேசுகிற விஷயங்களில் இதுவும் ஒன்றாகத் தோன்றியது. புறப்படலாமா என நினைத்தான். தற்செயலாகத் திரும்ப, குருவி கண்ணில் பட்டது. இன்னும் முயற்சியை விடவில்லை. அங்கேயே பறப்பதும், சுற்றிச் சுற்றி மரத்தில் அமர்வதுமாக இருந்தது.

ஜனாவும் அதைக் கவனித்தான். அவனது முகத்தில் சிரிப்பு மறைந்திருந்தது.

''வெளிப்படையாகவே கேக்கறேன்... உன் மனைவி எந்த ஒரு ஆணின் பிரியத்திற்கு உரியவளாகவும் இருந்திருக்கக் கூடாது. இதுதானே உன் பிரச்னை?'' —சிறிய இடைவெளிக்குப் பிறகு மீண்டும் தொடர்ந்தான்.

''எஸ்.... சுத்தமான ஒரு ஆண் அப்படித் தானே எதிர்பார்ப்பான்....''

''சுத்தம்ங்கிறதுக்கு என்ன அர்த்தம், யாரையும் நினைக்காம, பழகாம இருக்கிறதா?''

''ம்.....''

''நீ யாரையும் நெனைச்சதில்லையா?'' ஜனா திடீரென்று குரலை உயர்த்தினான். ''சொல்லு... நெஞ்சுல கை வச்சு சொல்லு...''

ஒரு சமயத்தில் டைப்பிஸ்ட் ரேவதியை அவன் சுற்றி வந்தது உண்டு. ஏதாவது சாக்கில் அவளிடம் பேச முயலுவான். கோயிலுக்குப் போனதாக வெள்ளிக் கிழமைகளில் பிரசாதம் கொடுத்திருக்கிறான். கேண்டீனில் எதிரில் அமர்ந்து சாப்பிட்டிருக்கிறான். ''எப்ப சார் கல்யாணம்?'' என்று ஒருமுறை அவள் கேட்டதற்கு, 'உங்களை மாதிரி ஒரு நல்ல பொண்ணு கிடைக்கிற போது' எனப் பதில் சொன்னான். ஆபீஸில் எல்லோரும் சிரித்தார்கள். ஹெட் கிளார்க் தனியே கூப்பிட்டு, 'என்னய்யா.... ரொம்பத் தேறிட்ட போலிருக்கே....' என்றார். இதற்கெல்லாம் சாட்சியமாய் இருந்தவன் ஜனா.

விஸ்வம் பதில் சொல்லவில்லை.

''உன்னைக் குற்றம் சொல்லலை. இதெல்லாம் சாதாரண மட்டத்திற்கு வந்து விட்ட விஷயங்கள்... இன்னிக்குப் பெண்களும் வெளியே வந்தாச்சு. சம்பிரதாயங்களை மீறித்தான் இது நடந்திருக்கு. நமக்கு இந்த மீறுதல்ங்கிறது ரொம்பப் புதிய அனுபவம். அதனால மயங்குவதற்கான சந்தர்ப்பம் அதிகம். யாரைக் குறை சொல்றதுன்னு தெரியலை. பத்திரிகை, சினிமா, ஏன்... நீயும் நானும் கூட காரணமா இருக்கலாம். தவறு எல்லாத் திசைகளிலும் இருக்கு. பழைய சினேகிதம்னே வச்சுக்குவோம். புருஷன்ங்கிற நிலையில இன்னிக்கும் என்ன பாதிப்பு? அதைச் சொல்லு......''

இது என்ன வாய்ப்பாட்டுக் கணக்கா. இதுதான் விடை என்று சொல்ல? மனத்தில் பதிகிற வேதனைகளை எப்படி வெளிப் படுத்த முடியும்?

ஜனாவின் பார்வை தன்னை சுடுவதைப் போல உணர்ந்தான் விஸ்வம். குறுகுறுப்பைத் தவிர்க்க முகத்தைத் திருப்பிக் கொண்டான்.

பளிச்சென்று பார்வையில் விழுந்த நீல வானம். பச்சை இலைகள். காற்றின் சலசலப்பு....

கீச் கீச் சென்று கத்திக் கொண்டு அந்தக் குருவி மீண்டும் கண்ணெதிரில் பறந்தது. துரத்துவதை மற்ற பறவைகள் இன்னும் விடவில்லை போலும்.

''நான் சொல்றது இதான். கல்யாணம்ங்கிறது நிகழ்கால எதிர்கால வாழ்க்கைக்கு மட்டும்தான் பொறுப்பானது. கடந்த காலத்தை உரசிப் பார்க்க யாருக்குமே உரிமை கிடையாது. அவ்வளவுதான்....''

ஜனா ரொம்பவும் களைத்து விட்டதைப் போலத் தோன்றினான். மீண்டும் சிகரெட் ஒன்றைப் பற்ற வைத்துக் கொண்டான்.

''உனக்கு?''

விஸ்வம் தானும் ஒன்றை எடுத்துக் கொண்டான்.

திடீரென முகத்தைப் பார்க்கப் பிடிக்காமலும், பேசுவதற்கு இனி ஒன்றுமில்லை என்பதைப் போலவும் ஆகி விட்டது.

புகை காற்றில் அலைந்து கரைந்தது.

சிகரெட்டை நசுக்கி அணைத்து விட்டு ஜனா புல்தரையில் சரிந்து படுத்துக் கொண்டான். சில சமயம் மௌனம் கூட ஒரு சம்பாஷணைதான் என எதிலோ படித்தது ஞாபகம் வந்தது விஸ்வத்திற்கு. அவரவர் போக்கில் யோசித்துக் கொண்டு யுகம் யுகமாய் அங்கேயே கிடப்பதைப் போலத் தோன்றியது அவனுக்கு.

அனேகமாக இருட்டி விட்டது. ஜன சந்தடி வெகுவாகக் குறைந்திருந்தது. ஆங்காங்கே மினுக்கும் பூச்சியாய் மின் விளக்குகள்.....

எழுந்து உதறிக் கொண்டு, ''போகலாமா?'' என்றான் ஜனா. ஏதோ தொலை தூரத்திலிருந்து கேட்கிற குரல்.

''ம்....?''

''நேரமாச்சு..... எந்திரி......''

விஸ்வம் எழ, கனம் குறைந்த மாதிரி இருந்தது.

---

**''சமீபத்தில் நானும் என் மனைவியும் சேர்ந்து எடுத்துக்கிட்ட போட்டோவைப் பார்த்து அசந்துட்டியே! ஜோடிப் பொருத்தம் அம்சமா இருக்கா?''**

**''அதில்லேப்பா, இவ்வளவு பக்கத்துல மனைவி இருக்கும்போது எப்படி மனம் விட்டுச் சிரிச்சேன்னு ஆச்சர்யமாயிருக்கு!''**

**— மணியன் தர்மலிங்கம்.**



# இளைஞன்?

**கு**ண்டூசித் தலை அளவு பிரச்னைதான்.

சந்தர்ப்ப வசத்தால் மனைவியை விட்டுப் பிரிந்த கணவனை வேறொரு பெண் காதலிக்க, கணவன் அந்த வேறொரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்கிறானா இல்லையா? சினிமா ஃபார்முலாப்படி 'வேறொரு பெண்' தற்கொலை செய்து கொண்டு இறந்து போக, பிரிந்து போன மனைவி கணவனுடன் இணைகிறாள்.

இந்தக் கதையை வைத்துக் கொண்டு செஸ் விளையாட்டு விளையாடி இருக்கிறார் டைரக்டர் யோகராஜ். ஆட்டத்தில் பயன்படுத்தப்பட்ட காயின்கள்: இளவரசி தேவிஸ்ரீ அண்ட் யோகராஜ். இந்த யோகராஜ் ஹீரோ மட்டுமல்ல; கதை, திரைக்கதை, வசனம், பாடல்கள், டைரக்ஷன் சகலமும். (தயாரிப்பு: திருமதி யோகராஜ்?)

வேலையில்லாத இளைஞனாகப் பட்டணத்திற்கு வந்து வீட்டுக் கதவை இருட்டில் தட்டி, வாடகைக்கு இடம் கேட்டு மறுக்கப்பட்டு, வீட்டு வாசலிலேயே இரவு முழுக்கத் தூங்கிக் காத்திருந்து, காலையில் வாடகைக்கு வீட்டைக் கேட்கும் ஸீனில் தொடங்கி, வேலை தேடி வந்த தேவிஸ்ரீ காதல் என்று சொல்லிக் கட்டியணைத்ததும் அவரை அடிப்பதில் தொடர்ந்து, இளவரசி இறந்து விட்டார் என்ற நாடகத்தைக் காட்டிக் கடைசியில் படத்தைச் சுபமாக முடிக்கும் ஒவ்வொரு ஸீனிலும் கே. பாக்யராஜ் இருக்கிறார். ஸாரி, யோகராஜ் பாக்யராஜை நகல் எடுத்திருக்கிறார். பேபிஷாலினி வழக்கம் போல் வயதுக்கு மீறிய பேச்சு; வயதுக்கு மீறிய முதிர்ச்சி; வயதுக்கு மீறிய செயல்கள். இருந்தாலும ரசிக்க முடிகிறது.

பேபி ஷாலினி நிஜமாகவே யோகராஜின் பெண் இல்லை என்று தெரிய வரும் போது, பேபி ஷாலினியும் சரி, யோகராஜும் சரி, பந்தயம் கட்டிக் கொண்டு நடித்திருக்கிறார்கள் போல. கண்களில் நீரை, வரவழைத்து விடுகிறார்கள்.

இளவரசி நீண்ட நாட்களுக்கு அப்புறம் ஆஜராகி இருக்கிறாரா? — ரசிக்க முடிகிறது.

படத்தின் விறுவிறுப்புக்குக் காரணமும் இல்லாமல் சப்பைக் கட்டுக் காரணமும் வைத்து ஒரு ஸ்டண்ட் ஸீன். ம், பரவாயில்லை.

யோகராஜ் படம் முழுக்கக் கொஞ்சம் பயத்துடன், நிறைய டென்ஷனுடன் நடித்தாரோ என்னவோ, உதட்டை ஒரு மாதிரி மடித்து மடித்துக் கடித்துக் கொண்டு, கிட்டித்துப் போன பற்களுக்கிடையில் வார்த்தைகளைத் துப்புகிறாரா, கொஞ்சம் எரிச்சலாய் இருக்கிறது.

தொடக்கம் முதல் இறுதி வரை விறுவிறுப்பான படத்தைக் கொடுத்ததற்காக யோகராஜைப் பாராட்டலாம்தான். ஆனால் சூரியனைப் பிரதிபலிக்கிற நிலவு மாதிரி பாக்யராஜ் பாணியை இன்ச்சிற்கு இன்ச் கடைப்பிடிக்கிறாரே என்றுதான் கொஞ்சம் உறுத்தலாய் இருக்கிறது. ஸ்டைலை மாற்றுங்கள், யோகராஜ்!

— ஜெயமன்மதன்.



# பொன்னியின்

## அத்தியாயம் 21
## ‘நீயும் ஒரு தாயா?’

சிவ பக்தியே உருவெடுத்தாற் போல் விளங்கிய மாதரசி செம்பியன் மாதேவி தொடர்ந்து கூறினார்:—

"மகனே! உன் தந்தை கண்டராதித்த தேவர் சிம்மாசனம் ஏறிய பொழுது சோழ ராஜ்யத்தில் ஒரு சங்கடமான நிலைமை ஏற்பட்டிருந்தது. உன் பாட்டனார் பராந்தகச் சக்கரவர்த்தியின் பெருமையை நீ அறிந்திருக்கிறாய். அவருடைய ஆட்சி காலத்தில் சோழ ராஜ்யம் தெற்கே ஈழநாடு வரையிலும் வடக்கே கிருஷ்ணை நதி வரையிலும் பரவியது. ஆனால் அவருடைய அந்திய காலத்தில் இராஜ்யத்துக்கும் இராஜ குலத்துக்கும் பல விபத்துக்கள் ஏற்பட்டன. இராவணேசுவரனுடைய மூல பல சைன்யத்தைப் போல் இரட்டை மண்டலத்துப் படைகள் படை எடுத்து வந்தன. பராந்தகச் சக்கரவர்த்தியின் மூத்த புதல்வரும் ஒப்புவமையில்லாத வீராதி வீரரும் உன் பெரிய தகப்பனாருமான இராஜாதித்த தேவர் இரட்டை மண்டலத்து மாபெரும் சைன்யத்தை எதிர்க்கப் புறப்பட்டார். வடக்கே தக்கோலம் என்னுமிடத்தில் குருக்ஷேத்திர யுத்தத்தைப் போன்ற மாபெரும் போர் நடந்தது. லட்சக்கணக்கான வீரர்கள் மாண்டனர். இரத்த வெள்ளம் பெருக்கெடுத்தோடியது. இரட்டை மண்டலத்தாரின் சைன்யம் சிதறி ஓடியது. ஆனால் அந்தப் போரில் இராஜாதித்த தேவர் பலியாகி விட்டார். உன்னுடைய சித்தப்பா அரிஞ்சய தேவரும் அந்தப் போரில் ஈடுபட்டுப் படுகாயம் அடைந்தார். ஆனால் அவரைப் பற்றி யாதொரு விவரமும் அப்போது தெரியவில்லை. அரிஞ்சய தேவரின் மூத்த புதல்வர் சுந்தர சோழர், சின்னஞ் சிறு பிராயத்துப் பிள்ளை — ஈழத்துப் போருக்குச் சென்றிருந்தார். அவரைப் பற்றியும் செய்தி கிட்டவில்லை. இராஜ குலத்தில் பிறந்து அச்சமயம் தஞ்சை அரண்மனையில் பராந்தகச் சக்கரவர்த்தியின் அருகில் இருந்தவர் உன் தந்தை தான்.

ஆனால் உன் தந்தையோ இளம் பிராயத்திலேயே இராஜ்ய விவகாரங்களை வெறுத்துச் சிவபெருமானிடம் மனத்தைச் செலுத்தி வந்தவர். அவருக்கு யுத்தம் என்றால் பிடிப்பதில்லை. மன்னர்களின் மண்ணாசை காரணமாக மக்கள் போரிட்டு மடிவானேன் என்று அவர் வருந்தினார். தந்தையிடமும் சகோதரர்களிடமும் அதைக் குறித்து வாதித்தார். சிவஞானச் செல்வர்களான பெரியோர்களின் சகவாசத்திலும் புண்ணிய ஸ்தல யாத்திரையிலும் ஆலய வழிபாட்டிலும் காலத்தைச் செலவிட்டார். வாள், வேல் முதலிய ஆயுதங்களைக் கையினால் தொடவும் அவர் விரும்புவதில்லை. யுத்த தந்திரங்களிலும் போர் முறைகளிலும் அவர்

அமரர் கல்கி

# செல்வன்

பயிற்சி பெறவில்லை. பொய்யும் புனை சுருட்டும் வஞ்சகமும் வேஷ மும் சூழ்ச்சிகளும் மறு சூழ்ச்சிகளும் கொலை முதலிய பாதகங்களும் நிறைந்தது இராஜரீகம் என்று அவர் நம்பினார். 'திருடன் பிறர் பொரு ளைத் திருடுவதற்கும் ஒரு நாட்டு அரசன் இன்னொரு நாட்டைக் கவர் வதற்கும் என்ன வித்தியாசம்?' என்று அவர் கேட்டார்.

மகனே! விதி வசத்தால் அப்படிப் பட்ட கொள்கையுடைய உன் தந்தை இந்தச் சோழ நாட்டின் பாரத்தை வகிக்கும்படியாக நேர்ந்து விட்டது.

பராந்தகச் சக்கரவர்த்தி இராஜ் யத்துக்கு நேர்ந்த பல விபத்துக்களி னாலும் இராஜாதித்தரின் மரணத்தி னாலும் மனம் நொந்து மரணத்தை எதிர்பார்த்திருக்கும் வேளையில் உன் தந்தையை அழைத்து, 'இராஜ்ய பாரத்தை நீதான் ஏற்றுக் கொள்ள வேண்டும்' என்றார். உன் தந்தை மரணத் தறுவாயிலிருந்த உன் பாட்ட னாரின் மனத்தை மேலும் புண்படுத்த விரும்பாமல் ஒப்புக் கொண்டார். உன் தந்தையை எனக்கு முன்னால் மணந்திருந்த பாக்கியவதியான வீர நாராயணி தேவி அதற்கு முன்னரே சிவபதம் அடைந்து விட்டார். நானோ அப்போது உன் தந்தையைப் பார்த்ததேயில்லை. ஆகையால், உன் தந்தையின் காலத்துக்குப் பிற்பாடு சோழ மகா ராஜ்ஜியம் என்ன ஆவது என்ற கவலை உன் பாட்டனாருக்கு ஏற்பட்டது.

அதிர்ஷ்டவசமாக அச் சமயத்தில் உன் சிறிய தந்தையின் குமாரரைத் தேடுவதற்காக ஈழத்திற்குப் போன வர்கள், அங்கே ஒரு தீவிலிருந்த சுந்தர சோழரைக் கண்டுபிடித்து அவரை அழைத்துக் கொண்டு வந் தார்கள்.

பராந்தகச் சக்கரவர்த்தி சுந்தர சோழரிடம் அளவிலாத பிரியம் வைத் திருந்தார். பேரப் பிள்ளையைக் கைக் குழந்தையாயிருந்த நாளிலிருந்து மடி யில் வைத்துத் தாலாட்டிப் பாராட்டி வளர்த்து வந்தார். பெரியோர்கள் பலர் சுந்தர சோழரின் மூலமாய்ச் சோழ குலம் மகோந்நதம் அடையப் போகிறது என்று சொல்லியிருந்தார் கள்.

இத்தகைய காரணங்களினால் உன் பாட்டனாருக்குச் சுந்தர சோழர் மீது அபாரமான பிரேமை. ஆகையால் உன் தந்தை சிம்மாசனம் ஏறும் போது சுந்தர சோழருக்கு இளவரசுப் பட்டம் கட்டி விட வேண்டும் என்றும், அவரு டைய சந்ததியார்கள்தான் சோழ நாட்டை ஆண்டு வர வேண்டும் என் றும் சொல்லி விட்டுச் சிவபதம் அடைந்தார்.

இந்த விவரங்களையெல்லாம் உன் தந்தை என்னிடம் கூறினார். பராந்த கச் சக்கரவர்த்தி மரணத் தறுவாயில் வெளியிட்ட விருப்பத்தை நிறை வேற்ற அவர் உறுதி கொண்டிருந் தார். சுந்தர சோழரும் அவருடைய சந்ததியாரும் பட்டத்துக்கு வருவதில் எவ்வித இடையூறும் நேரிடக் கூடா தென்று எண்ணினார். உன் தந்தைக்கு இராஜ்ஜியம் ஆளும் ஆசை இல்லை; இராஜரீக காரியங்களில் பற்றுதலும் இல்லை. அவர் புண்ணிய புருஷர். அவருடைய உள்ளம் சதா சர்வ கால மும் நடராஜப் பெருமானின் இணை யடித் தாமரைகளில் சஞ்சரித்துக் கொண்டிருந்தது. ஆகவே தமது தம்பியாகிய அரிஞ்சயரிடமும் அவரு டைய புதல்வர் சுந்தர சோழரிடமும் இராஜ்ய காரியங்கள் முழுவதையும் ஒப்படைத்திருந்தார். தாம் சிவபெரு மானுடைய கைங்கரியத்தில் ஈடு பட்டிருந்தார். முன்னமே சொன்

னேனே. அதுபோல் அவருக்கு மறுபடியும் மணம் செய்து கொள்ளும் எண்ணமே இருக்கவில்லை. ஆனால் அவருடைய மன உறுதியைக் கலைக்க நான் ஒருத்தி வந்து சேர்ந்தேன். நானும் சிவபக்தியில் ஈடுபட்ட 'பிச்சி' என்று அறிந்ததினாலேயே அவர் என் மீது பிரியங் கொண்டு என்னைத் திருமணம் புரிந்தார். அவரைப் பதியாக அடைந்த நான் பாக்கியசாலி. எத்தனையோ ஜன்மங்களில் அவரை அடைய நான் தவம் செய்திருக்க வேண்டும். அவரைத் தந்தையாகப் பெற்ற நீயும் பாக்கியசாலி. இந்த உலகில் இறைவனைக் கண்ணாரக் கண்டு மகிழ்ந்த மகான்கள் வெகு சிலர்தான். சிவபெருமான் ரிஷபாரூடராய் வந்து உன் தந்தைக்குக் காட்சி தந்து அவரை இம் மண்ணுலகிலிருந்து அழைத்துப் போனார். நான் இப்போது உன்னை என் ஊனக் கண்களால் பார்ப்பது போல உன் தந்தை பரமசிவனைத் தரிசித்தார். அப்படிப்பட்ட புண்ணிய புருஷருடைய விருப்பத்தை நிறைவேற்ற நானும் நீயும் கடமைப்பட்டவர்கள்!......"

அன்னை இவ்விதம் கூறி நிறுத்திய போது, கேட்டுக் கொண்டிருந்த மகனுடைய உடல் பதறிக் கொண்டிருந்தது; அவனுடைய உள்ளம் கொதித்துக் கொண்டிருந்தது.

"அது எப்படி, தாயே! என் தந்தை என்னிடம் ஒன்றும் தெரிவிக்கவில்லையே? நான் என்ன கடமைப்பட்டிருக்கிறேன்? எந்த விதத்தில் கடமைப்பட்டிருக்கிறேன்?" என்றான் மதுராந்தகன்.

"மகனே! கேள்! உன் தந்தை சிவபெருமானுடைய பாத மலர்களை அடைந்த போது நீ சின்னஞ்சிறு பிள்ளை. ஆகையால், உன்னிடம் அவர் ஒன்றும் தெரியப்படுத்த முடியவில்லை. ஆனால் என்னிடம் சொல்லி விட்டுப் போனார். நாங்கள் மணம் புரிந்த புதிதில் மக்கள் பேற்றை விரும்புவதில்லையென்று முடிவு செய்திருந்தோம். ஆனால் பேதையாகிய என்னால் அந்த மன உறுதியை நிறைவேற்ற முடியவில்லை. கன்னிப் பருவத்தில் சிவபெருமானிடம் நான் கொண்டிருந்த பக்தி உன் தந்தையிடம் கொண்ட பிரேமையாக மாறியது. நாளடைவில், என் கையில் ஏந்தி மார்போடு அணைத்து மடியில் வைத்துத் தாலாட்டிப் பாராட்டிக் கொஞ்சுவதற்குக் குழந்தை வேண்டும் என்று என் இருதயம் தாபம் கொண்டது. மற்றப் பெண்களின் கையிலும் மடியிலும் குழந்தையைக் கண்டால் என் உடம்பெல்லாம் துடித்தது; உள்ளம் பற்றி எரிந்தது. குழந்தைப் பருவத்தில் என்னை ஆட் கொண்ட இறைவனிடம் வரம் கோரினேன். இறைவனும் இந்தப் பேதையின் கோரிக்கையை நிறைவேற்றினார். உன்னை எனக்கு அளித்தார். ஒரு பக்கத்தில் உன்னைப் பெற்றதினால் நான் உள்ளமும் உடலும் பூரித்தேன்; மற்றொரு பக்கத்தில் உன் தந்தையின் கோபத்துக்கு ஆளாகி விட்டேனோ என்று பயந்தேன். அந்த மகா புருஷர் என் மீது கோபிக்கவில்லை. ஆனால் அவருடைய வாக்கை நிறைவேற்ற வேண்டிய பொறுப்பை மட்டும் என் மீது சுமத்தி விட்டுப் போனார்.

மகனே! உன்னை இந்த மண்ணுலக வாழ்க்கையில் பற்றுதல் கொள்ளாமல் சிவ பக்த சிகாமணியாகும்படி வளர்ப்பேன் என்று உன் தந்தைக்கு வாக்குக் கொடுத்தேன். அதை நிறைவேற்றி விட்டதாகவே சில காலத்துக்கு முன்பு வரையில் எண்ணி இறுமாந்திருந்தேன்.

ஆனால், என் உயிர்க்குயிரான மகனே! என் கண்ணுக்குக் கண்ணான செல்வப் புதல்வனே! சில நாளாக நான் ஏதேதோ கேள்விப்படுகிறேன். அப்படிப்பட்ட பேச்சைக் கேட்கும்போதெல்லாம் என் நெஞ்சு புண்ணாகிறது. நான் கேள்விப்படுவதெல்லாம் பொய்யென்று நீ உறுதி சொல்லி என் நெஞ்சில் உள்ள புண்ணை ஆற்ற மாட்டாயா?" என்று அன்னை செம்பியன்மாதேவி கெஞ்சினாள்.

"தாயே! தங்களுடைய மர்மமான வார்த்தைகள் என்னுடைய நெஞ்சையும் புண்ணாக்குகின்றன. தாங்கள்

என்ன கேள்விப்படுகிறீர்கள்? என்னிடம் என்ன எதிர்பார்க்கிறீர்கள்? என்னிடம் என்ன உறுதி கேட்கிறீர்கள்!'' என்று மதுராந்தகன் சீறினான்.

''குழந்தாய்! என் மனத்திலுள்ளதை அறிந்து கொள்ளும் சக்தியை நீ இழந்து விட்டாய் போலும். வெளியிட்டுச் சொல்லத்தான் வேண்டும் என்கிறாய். நல்லது, சொல்லுகிறேன். உன் மனம் சிவபக்தியாகிற கங்கை நதியிலிருந்து மண்ணாசையாகிய குட்டையில் விழுந்து விட்டது என்று கேள்விப்படுகிறேன். சோழ குலத்துச் சிம்மாசனத்தில் ஏற நீ ஆசை கொண்டிருக்கிறாய் என்று கேள்விப்படுகிறேன். உன் புனிதமான உள்ளத்தை நம் விரோதிகள் அவ்விதம் கெடுத்து விட்டார்கள் என்று அறிகிறேன். நான் இவ்வாறு கேள்விப்பட்டது உண்மையல்ல என்று நீ கூறினால், என் மனம் நிம்மதி அடையும்!'' என்றாள் மூதாட்டி.

மதுராந்தகன் இதுவரை உட்கார்ந்திருந்த பீடத்திலிருந்து எழுந்து நின்றான். அவனுடைய படபடப்பைப் பார்த்துத் தாயும் எழுந்தாள்.

''என்னுடைய மனத்தை விரோதிகள் யாரும் கெடுக்கவில்லை. என்னைச் சிம்மாசனம் ஏற்ற விரும்புகிறவர்கள் என் விரோதிகளா? எனக்காகத் தங்கள் உயிரையும் கொடுக்க முன் வந்திருப்பவர்கள் என் விரோதிகளா? ஒரு நாளும் இல்லை. உண்மையில் என் ஜன்ம விரோதி யார்? என்னைப் பெற்றவளாகிய நீதான்!....'' என்று மதுராந்தகன் கூவினான்.

ஆத்திர மிகுதியால் அச் சமயம் அவன் மரியாதையை மறந்தான்; சின்னப் பழுவேட்டரையர் நல்ல வார்த்தைகளினால் அன்னையின் மனத்தை மாற்றும்படி சொல்லியிருந்ததை மறந்து வசைமாரி பொழிந்தான்.

''ஆம்; நீதான் என் ஜன்ம சத்துரு. வேறு யாரும் இல்லை. நீயும் ஒரு தாயா? நீயும் ஒரு ஸ்திரீயா? உலகத்தில் தாய்மார்கள் தங்கள் பிள்ளைகளின் உரிமைக்காகப் படாத பாடு படுவார்கள். கதைகளிலும் காவியங்களிலும் கேட்டிருக்கிறேன். வாழ்க்கையிலும் பார்த்திருக்கிறேன். அன்னையின் இயல்புக்கே மாறான இயல்புடைய நீ மானிட ஸ்திரீதானா? அல்லது மனிதப் பெண் உருக்கொண்ட அரக்கியா? நான் உனக்கு என்ன துரோகம் செய்தேன்? நீ எதற்காக இந்தப் பெரும் துரோகத்தை எனக்குச் செய்கிறாய்? எல்லாவித நியாயங்களினாலும் எனக்குச் சேர வேண்டிய இராஜ்யத்தைப் பிடுங்கி இன்னொருவனுக்குக் கொடுப்பதில் உனக்கு என்ன சிரத்தை! என் தந்தையின் விருப்பம் என்று சொல்லுகிறாய். அவருக்கு நீ வாக்குக் கொடுத்ததாகச் சொல்லுகிறாய். அதற்கெல்லாம் அத்தாட்சி என்ன? நான் நம்பவில்லை. எனக்கு யாரோ துர்ப்போதனை செய்து விட்டதாகச் சொல்லுகிறாய். இல்லவே இல்லை. உனக்குத்தான் யாரோ துர்ப்போதனை செய்து உன் மனத்தைத் தான் கெடுத்து விட்டிருக்கிறார்கள். தாயை மகனுக்கு விரோதியாக்கியிருக்கிறார்கள். நியாயமாக எனக்கு உரிய சோழ சிங்காதனத்தை நான் ஒரு நாளும் கைவிட மாட்டேன். நீ சொன்னாலும் விட மாட்டேன். சிவபதம் அடைந்த என் தந்தையே திரும்பி வந்து சொன்னாலும் கேட்க மாட்டேன். இந்தச் சோழ சாம்ராஜ்யம் என்னுடையது; இந்தப் பழமையான சிங்காதனம் எனக்குரியது; கரிகால் பெருவளத்தான் அணிந்திருந்த மணி மகுடம் எனக்கு உரியது. அவற்றை நான் அடைந்தே தீருவேன். இதோ என் கழுத்தில் போட்டிருக்கும் உருத்திராட்ச மாலை நீ எனக்கு அளித்தது; தாய் என்ற மரியாதைக்காக இத்தனை



நானும் அதைத் தரித்திருந்தேன்; என்னைப் பேடியாக்கி நாடுநகரமெல்லாம் நகைக்கும்படி செய்த இந்த ருத்திராட்ச மாலையை இதோ இந்தக் கணமே கழற்றி எறிகிறேன்; நீயே அதை வைத்துக் கொள்ளலாம்!''

இவ்விதம் பித்தம் பிடித்தவனைப் போல் பிதற்றி விட்டு மதுராந்தகன் தன் கழுத்திலிருந்த ருத்திராட்ச மாலையை அவசரமாகக் கழற்ற முயன்றான்; கழற்ற முடியாமல் அதை அறுக்க முயன்றான்; ஆனால் கழுத்து நெறிந்ததே தவிர மாலை அப்படியேயிருந்தது.

மதுராந்தகன் அழகிய தோற்றமுடையவன். சுந்தர சோழரின் புதல்வர்களைக் காட்டிலும் அழகன் என்று சொல்லலாம். அவர்களிடம் இல்லாத பெண் தன்மையின் வசீகரமான சாயல் அவன் முகத்தில் பொலிந்தது. அத்தகைய களை பொருந்திய அவன் முகம் கோபத்தினாலும் ஆத்திரத்தினாலும் இப்போது விகாரமடைந்து காட்டியது. அதைக் காணச் சகியாமல் செம்பியன் மாதேவி கண்களை மூடிக் கொண்டாள்.

அவன் சத்தமிட்டு ஓய்ந்த பிறகு தன் கண்களைத் திறந்து பார்த்தாள். குரலின் சாந்தத்தில் சிறிதும் மாறுதல் இல்லாமல், ''மகனே! சற்று அமைதியாயிரு. நான் வஞ்சக அரக்கியாகவே இருந்தாலும், என் வார்த்தைகளைச் சற்று செவி சாய்த்துக் கேள்!'' என்றாள்.

மதுராந்தகன் அந்தக் குரலைக் கேட்டுச் சிறிது அடங்கினான். ''நன்றாய்க் கேட்கிறேன். கேட்க மாட்டேன் என்று மறுக்கவில்லையே!'' என்றான்.

''தாயின் இயல்பைக் குறித்து நீ குறிப்பிட்டாய். பொல்லாத அரக்கி



யாயிருந்தாலும் தன் குழந்தைக்குத் துரோகம் செய்ய மாட்டாள். துஷ்ட மிருகங்களும் தங்கள் குட்டிகளை மற்றத் துஷ்ட மிருகங்களிடமிருந்து காப்பாற்ற முயல்கின்றன. அது போலவேதான் நானும் உன்னைக் காப்பாற்ற முயல்கிறேன். நீ இராஜ்யத்துக்கு ஆசைப்பட வேண்டாம் என்று நான் சொல்லுவதற்கு முன்னே கூறியதைத் தவிர வேறு காரணமும் இருக்கிறது. இராஜ்ய ஆசையினால் உன் உயிருக்கே ஆபத்து வரும். பெற்று வளர்த்த தாய்



தன் மகன் உயிரோடிருக்க வேண்டும் என்று ஆசைப்படுவதில் குற்றம் உண்டா? நீ இராஜ்யத்துக்கு ஆசைப் பட்டால், சுந்தர சோழரின் புதல்வர் களுக்கு எதிரியாவாய். ஆதித்த கரிகாலனும் அருள்மொழிவர்மனும் வீராதி வீரர்கள். நீயோ ஆயுதம் எடுத்து அறியாதவன். சோழ நாட்டுச் சைன்யம் முழுவதும் சுந்தர சோழருடைய புதல்வர்களின் கட்சியிலேயே இருக்கும். படைத் தலைவர்களும் அவர்களுக்குச் சார்பாக இருப்பார்கள். அக்கம் பக்கத்து நாடுகளிலும் அவர்களுக்கு நண்பர்கள் இருக்கிறார்கள். உனக்கு துணைவர்கள் யார்? யாரை நம்பி நீ அவர்களுடன் போர் தொடங்குவாய்? மகனே! சில நாளாக வானத்தில் தூமகேது தோன்றியிருப்பதை நீ அறிவாய். வால் நட்சத்திரம் வானில் தோன்றினால் அரச குலத்தினர் உயிருக்கு அபாயம் என்பது உலகம் கண்ட உண்மை. அப்படி நேரும் விபத்து உனக்கு நேராமலிருக்க வேண்டுமே என்றுதான் நான் கவலைப்படுகிறேன். குழந்தாய்! என் ஏக புதல்வன் உயிரோடிருக்க வேண்டும் என்று நான் ஆசைப்படுவது தவறா? அது உனக்கு நான் இழைக்கும் துரோகமா?''

இவ் வார்த்தைகளினால் மதுராந்தகனுடைய ஆத்திரம் சிறிது தணிந்தது. அவன் உள்ளம் கனிவடைந்தது.

''அன்னையே! மன்னியுங்கள்! தங்களுடைய கவலை இதுதான் என்று முன்னமே சொல்லியிருக்கலாமே? ஒரு நொடியில் தங்கள் கவலையைத் தீர்த்திருப்பேனே! நான் அப்படியொன்றும் துணைவர்கள் இல்லாத அநாதையல்ல. சோழ சாம்ராஜ்யத்தில் மிகச் செல்வாக்கு வாய்ந்த சிற்றரசர்களும் பெருந்தரத்து அதிகாரிகளும் என் பக்கம் இருக்கிறார்கள். பழுவேட்டரையர்கள் என் கட்சியில் இருக்கிறார்கள். கடம்பூர் சம்புவரையர் என் பக்கம் இருக்கிறார். தங்கள் சகோதரரும் என் மாமனுமான மழவரையரும் என் கட்சியில் இருக்கிறார். மற்றும் நீல தங்கரையரும், இரட்டைக் குடை

இராஜாளியாரும், குன்றத்தூர்ப் பெருங்கிழாரும் தங்களுடைய பூரண பலத்துடன் என்னை ஆதரிக்கிறார்கள். என்னை ஆதரித்து நிற்பதாகச் சத்தியம் செய்து கொடுத்திருக்கிறார்கள்........''

''மகனே! இவர்கள் செய்து கொடுக்கும் சத்தியத்தில் எனக்கு நம்பிக்கையில்லை. சுந்தர சோழச் சக்கரவர்த்திக்கும் அவருடைய சந்ததிகளுக்கும் உண்மையுடன் நடப்பதாக இவர்கள் ஒரு காலத்தில் சத்தியம் செய்து கொடுத்தார்கள். அவர்கள் உனக்கு உண்மையாக நடப்பார்கள் என்று வைத்துக் கொள்ளலாம். இவர்களிடம் உள்ள சைன்யம் வெகு சொற்பம் என்பது உனக்குத் தெரியாதா? வடக்கேயுள்ள சைன்யம் ஆதித்த கரிகாலனுடைய தலைமையில் இருக்கிறது. தென் திசைச் சேனையோ கொடும்பாளூர் வேளாரின் தலைமையில் இருக்கிறது.....''

''தாயே! என் கட்சியை ஆதரிக்கும் சிற்றரசர்கள் எந்த நேரத்திலும் தலைக்குப் பதினாயிரம் வீரர்களைச் சேர்த்துக் கொண்டு வரக் கூடியவர்கள்.''

''சைன்யம் ஒரு பக்கம் இருக்கட்டும். மக்களைப் பற்றி என்ன? சோழ நாட்டு மக்கள் சுந்தர சோழரின் புதல்வர்களிடம் எவ்வளவு அபிமானம் கொண்டவர்கள் என்பது உனக்குத் தெரியாதா? இன்றைக்கு நீயே பார்த்தாய். இந்தப் பழையாறை நகருக்கு இன்று அருள்மொழி வர்மனோ ஆதித்த கரிகாலனோ வந்திருந்தால் மக்கள் எப்படித் திரண்டு கூடி வரவேற்றிருப்பார்கள்? இந்த ஊர் மக்கள் ஒரு காலத்தில் உன்னிடமும் அன்புடனேதான் இருந்தார்கள். பழுவேட்டரையர்களுடன் நீ உறவு பூண்டதிலிருந்து உன்னை மக்கள் வெறுக்கவே தொடங்கி விட்டார்கள்...''

''தாயே! மக்களின் அபிமானத்தைப் பற்றி நான் சிறிதும் கவலைப்படவில்லை. மக்களின் அபிமானம் என்னத்துக்கு ஆகும்? மக்கள் ஆளப்பட வேண்டியவர்கள். சிம்மாசனத்தில் யார் வீற்றிருந்து அரசு செலுத்துகிறார்களோ, அவர்களிடம் மக்கள் பக்தி செலுத்த வேண்டியவர்கள்!.....''

''மகனே! உனக்குப் போதனை செய்திருப்பவர்கள் அரசியல் நீதியின் ஆரம்ப தத்துவத்தைக் கூட உனக்கு உணர்த்தவில்லை. மக்களின் அபிமானம் இல்லாமல் எந்த அரசனும் நீடித்த அரசு செலுத்த முடியாது. அப்படி அரசு புரிவதில் புண்ணியமும் இல்லை!....''

இவ்வாறு அந்தப் பெருமூதாட்டி சொல்லிக் கொண்டிருந்த போது அரண்மனை வாசலில் ஒரு பெரும் ஆரவாரம் கேட்டது. ஓலக் குரலும் சாபக் குரலும் கோபக் குரலும் கேள்விக் குரலும் ஆயிரக்கணக்கான மனித கண்டங்களிலிருந்து எழுந்து பெருங் காற்று அடிக்கும் போது சமுத்திரத்தில் உண்டாகும் பயங்கரப் பேரொலியாகக் கேட்டது.

''மகனே! சோழ சாம்ராஜ்யத்துக்கு ஏதோ பெரும் விபத்து நெருங்கிக் கொண்டிருக்கிறது. அதன் முதல் அறிகுறிதான் இது. நான் அரண்மனைக்கு வெளியே சென்று என்ன விஷயம் என்று தெரிந்து வருகிறேன். அது வரையில் நீ இங்கேயே இரு!'' என்றாள் அன்னை.

## அத்தியாயம் 22

## ''அது என்ன சத்தம்?''

ஓடையருகில் வந்ததும் படகில் வீற்றிருந்தது அரசிளங்குமரி குந்தவைதான் என்பதை வந்தியத்தேவன் நன்கு தெரிந்து கொண்டான். ஆழ்வார்க்கடியான் அவ்விடத்தில் நிற்கவே, வந்தியத்தேவனும் தயங்கி நின்றான்.

''அப்பனே! ஏன் நிற்கிறாய்! இளையபிராட்டி வெகு நேரமாய் உனக்காகக் காத்திருக்கிறார். படகில் ஏறியதும் 'இளவரசர் வந்து விட்டார்; பத்திரமாய் இருக்கிறார்' என்ற நல்ல



''அது என்ன ஆரவாரம்? கோபங்கொண்ட ஜனத் திரளின் கூச்சல் போல் அல்லவா இருக்கிறது?''

''ஆம்; அப்படித்தான் தோன்றுகிறது!'' என்றான் வந்தியத் தேவன்.

சமாசாரத்தை முதலில் சொல்! உன்னுடைய வீரப் பிரதாபங்களை அளந்து கொண்டு வீண் பொழுது போக்காதே! நான் திரும்பிப் போகிறேன். பழையாறையில் இன்றைக்கு நாம் கலவரப் பிசாசை அவிழ்த்து விட்டு விட்டோம். அதை மறுபடியும் பிடித்துக் கூண்டில் அடைக்க முடியுமா என்று பார்க்கிறேன். உன்னுடைய தடபுடல் சாகசங்களினால் எத்தனை தொந்தரவுகள் நேரிடுகின்றன?'' என்று ஆழ்வார்க்கடியான் சொல்லி விட்டு, வந்த வழியாக விரைந்து திரும்பிச் சென்றான்.

வந்தியத் தேவன் மனத்தில் ஒரு பெரு வியப்பு ஏற்பட்டது. இவன் எப்படி எல்லா விஷயங்களையும் தெரிந்து கொண்டிருக்கிறான்! இத்தனைக்கும் நம்மை ஒரு விவரமும் கேட்கவில்லை. வெறும் ஊகமா? அல்லது எல்லாம் அறிவானா? ஆண்டிகளில் பரம்பரை ஆண்டி என்றும் பஞ்சத்துக்கு ஆண்டி என்றும் இரண்டு வகை உண்டு. ஒற்றர்களிலும் அப்படி இரு வகை உண்டு போலும். நான் அவசரத்துக்கு ஒற்றன் ஆனேன். ஆகையால் அடிக்கடி சங்கடத்தை வருவித்துக் கொள்கிறேன். இந்த வைஷ்ணவன் பரம்பரை ஒற்றன் போலும். அதனால் ஒரு விதப் பரபரப்புமில்லாமல் சாவதானமாகத் தன் வேலையைச் செய்து வருகிறான். ஆனால் யாருக்காக இவன் வேலை செய்கிறான்? இவன் தன்னைப் பற்றிக் கூறியதெல்லாம் உண்மைதானா?

இவ்விதம் யோசித்துக் கொண்டே ஓடை நீர்க் கரைக்கு வந்த வந்தியத் தேவன், ஓடத்திலிருந்த இளவரசியின் முகத்தைப் பார்த்தான். ஆழ்வார்க்கடியானை மறந்தான். தான் போய் வந்த காரியத்தையும் மறந்தான். உலகத்தை மறந்தான். தன்னையுமே மறந்தான். ஆகா! இந்தப் பெண்ணின் முகம் தன்னை விட்டுச் சிறிது நேரம் கூடப் பிரிந்திருக்கவில்லை. கனவிலும் நனவிலும் புயலிலும் மழையிலும் காட்டிலும் கடல் நடுவிலும் தன்னுடன் தொடர்ந்து வந்தது. ஆயினும் என்ன விந்தை! நேரில் பார்க்கும் போது இந்தப் பொன் முகத்தின் அழகு எதனால் அதிகப்பட்டுக் காண்கிறது? ஏன் என் உள்ளத்தில் இத்தகைய கிளர்ச்சி உண்டாகிறது? ஏன் தொண்டையை வந்து அடைக்கிறது? நெஞ்சில் ஏன் இந்தப் படபடப்பு?

சாய நினைவு இல்லாமலே வந்தியத்தேவன் தண்ணீரில் சில அடிகள் இறங்கிச் சென்று ஓடத்தில் ஏறிக் கொண்டான். இளவரசி ஓடக்காரனைப் பார்த்துச் சமிக்ஞை செய்தாள். ஓடம் நகரத் தொடங்கியது. வந்தியத் தேவனுடைய உள்ளமும் ஊசலாடத் தொடங்கியது.

''நிமித்தக்காரா! இளவரசர்களுக்கு மட்டுந்தான் நீ நிமித்தம் சொல்வாயா? எனக்கும் சொல்வாயா? நிமித்தம் எப்படிச் சொல்வாய்? வானத்துக் கிரஹங்களையும் நட்சத்திரங்களையும் பார்த்துச் சொல்வாயா? அல்லது காக்கை குருவிகளைப் பார்த்துச் சொல்வாயா? கை ரேகை பார்த்துச் சொல்வாயா?... முகக் குறி பார்த்துத்தான் சொல்வாய் போலிருக்கிறது. இல்லாவிட்டால், ஏன் என் முகத்தையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறாய்? இப்படிச் செய்தாயானால் உயர்குலத்துப் பெண்கள் யாரும் உன்னிடம் நிமித்தம் கேட்க முன்வர மாட்டார்கள்!'' என்று அரசிளங்குமரி கூறியது வந்தியத் தேவன் செவிகளில் இனிய கிண் கிணி நாதமாகக் கேட்டது.

''அம்மணி! நிமித்தம் பார்ப்பதற்காகத் தங்கள் முகத்தைப் பார்க்கவில்லை. எங்கேயோ, எப்போதோ பார்த்த முகம் போலிருக்கிறதே என்று ஞாபகப்படுத்திக் கொள்ள முயன்றேன்.....''

''தெரியும், தெரியும்! நீர் மிக்க மறதிக்காரர் என்று எனக்குத் தெரியும். நான் ஞாபகப்படுத்துகிறேன். ஏறக் குறைய நாற்பது நாளைக்கு முன்னால் குடந்தை ஜோதிடர் வீட்டில் முதன் முதலாகப் பார்த்தீர். பிறகு அன்றைக்கே அரசலாற்றங் கரையில் பார்த்தீர்....''

''அம்மணி! நிறுத்துங்கள்! தங்கள்

வார்த்தையை நான் நம்ப முடியவில்லை. நாற்பது நாளைக்கு முன்பு தானா தங்களை முதன் முதலாகப் பார்த்தேன்! நாற்பதினாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் பார்க்கவில்லையா? நூறு நூறு நூறு ஜன்மங்களில் நூறாயிரம் தடவை தங்களைப் பார்க்கவில்லையா? மலை அடிவாரத்தில் பார்க்கவில்லையா? குன்றின் உச்சியிலே பார்க்கவில்லையா? நீர்ச் சுனையின் ஓரத்தில் பார்க்கவில்லையா? அடர்ந்த காட்டின் மத்தியில் கொடும் புலியினால் துரத்தப்பட்டு ஓடி வந்த தங்களை நான் காப்பாற்றவில்லையா? வேல் எறிந்து அந்தப் புலியைக் கொல்லவில்லையா? அப்போது நான் காட்டில் வேட்டையாடித் திரிந்த வேடுவனாயிருந்தேன். வித விதமான வர்ணச் சிறகுகள் உள்ள அழகழகான கிளிகளை வலை போட்டுப் பிடித்துக் கொண்டு வந்து கொடுத்தேன். தாங்கள் அந்தக் கிளிகளை என்னிடமிருந்து வாங்கிக் கொண்டு வானத்தில் பறக்க விட்டு விட்டுக் கல கலவென்று சிரித்தீர்கள். ஒரு சமயம் நான் மீன் பிடிக்கும் வலைஞனாயிருந்தேன். தூர தூரங்களிலுள்ள ஏரிகளுக்கும் ஆறுகளுக்கும் சென்று வெள்ளி மீன்கள், தங்க மீன்கள், மரகத மீன்களைப் பிடித்துக் கொண்டு வந்து கொடுத்தேன். அவற்றைத் தாங்கள் வாங்கிக் கொண்டு மறுபடியும் ஓடும் தண்ணீரில் விட்டு அவை துள்ளி நீந்திச் செல்லுவதைப் பார்த்து மகிழ்ந்தீர்கள். தொலை தூரங்களிலுள்ள கடல்களுக்குச் சென்று கடலின் ஆழத்தில் மூச்சுப் பிடித்து முழுகி முத்துக்களையும் பவளங்களையும் சேகரித்துக் கொண்டு வந்து கொடுத்தேன். தாங்கள் அவற்றைக் கையினால் அளைந்து பார்த்து விட்டு ஊரிலுள்ள சிறுவர் சிறுமிகளை அழைத்து அவர்களுடைய சின்னஞ் சிறு கைகளிலே முத்துக்களையும் பவளங்களையும் சொரிந்து அனுப்பினீர்கள். முந்நூறு வருஷங்கள் வளர்ந்த இலந்தை மரத்திலிருந்து முப்பது ஆண்டுகளுக்கு ஒரு முறை விளையும் இலந்தைக் கனியைக் காத்திருந்து பறித்து வந்து தங்களிடம் சமர்ப்பித்தேன். அதைத்



தாங்கள் வளர்த்த நாகணவாய்ப் பறவைக்குக் கொடுத்து அது கனியைக் கொத்திக் கொத்தித் தின்னுவதைப் பார்த்துக் களித்தீர்கள். தேவலோகத்துக்குப் போய் அங்குள்ள மந்தார மலர்களையும் பாரிஜாத புஷ்பங்களையும் பறித்துக் கொண்டு வந்து தங்கள் முன் பொழிந்தேன். 'எங்கள் கொல்லை வேலியில் பூக்கும் முல்லை மலரின் அழகுக்கும் மணத்துக்கும் இவை ஈடாகுமா?' என்று சொல்லி விட்டீர்கள். தேவேந்திரனிடமிருந்து அவன் அணியும் ஒப்பில்லா இரத்தின ஹாரத்தை வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தேன். 'ஒழுக்கமற்ற இந்திரன் அணிந்த மாலையை நான் கையினாலும் தொடுவேனா?' என்று சொல்லி விட்டீர்கள். கைலாசத்துக்குச் சென்று பார்வதி தேவியின் முன்னால் தவங்கிடந்து தேவியின் பாதத்தில் அணியும் சிலம்பை வாங்கிக் கொண்டு வந்தேன். தங்கள் பாதங்களில் சூட்டி விடுவதாகச் சொன்னேன். 'ஐயையோ! ஜகன் மாதாவின் பொற்பாதச் சிலம்பு என் காலிலே படலாமா? என்ன அபசாரம்? திரும்பக் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வா!' என்றீர்கள். போர்க் களத்துக்குச் சென்று அறுபத்து நாலு தேசங்களின் அரசர்களையும் வென்று அவர்களுடைய மணி மகுடங்களையெல்லாம் சேகரித்துக் கொண்டு வந்து தங்கள் முன் காணிக்கை செலுத்தினேன். தாங்கள் அந்த மணிமகுடங்களைக் கால்

களால் உதைத்துத் தள்ளினீர்கள். 'ஐயோ? தங்கள் மெல்லிய மலர்ப் பாதங்கள் நோகுமே?' என்று கவலைப்பட்டேன். இளவரசி! இவையெல்லாம் உண்மையா? இல்லையா? அல்லது நாற்பது நாளைக்கு முன்பு முதன் முதலாகத் தங்களை நான் பார்த்ததுதான் உண்மையா?'' என்றான் வந்தியத்தேவன். அப்படியும் அவன் பேசி முடித்து விட்டதாகக் காணப்படவில்லை.

''தேவி! இன்னொரு ஞாபகமும் வருகிறது. ஒரு சமயம் வெள்ளி ஓடத்தில் நாம் ஏறி, தங்கப் பிடி போட்ட தந்தத் துடுப்புகளைப் பிடித்துக் கொண்டு, வானக் கடலில் வெண்ணிலா அலைகளைத் தள்ளிக் கொண்டு, பிரயாணம் செய்தோம்..." என்று ஆரம்பித்தான்.

''ஐயையோ! இந்த நிமித்தக்காரனுக்கு நன்றாய்ப் பைத்தியம் பிடித்து விட்டது போலிருக்கிறது. படகைத் திருப்பிக் கரைக்குக் கொண்டு போக வேண்டியதுதான்!'' என்றாள் இளவரசி.

''இல்லை, தேவி, இல்லை! சற்று முன்னால் இந்த ஓடைக்கரைக்கு வந்து சேரும் வரையில் என் அறிவு தெளிவாகத்தானிருந்தது. இல்லாவிட்டால் இந்தப் பழையாறை நகருக்குள் பிரவேசிப்பதற்கு நான் உபாயம் கண்டுபிடித்திருக்க முடியுமா? மதுராந்தகத் தேவரிடம் நிமித்தக்காரன் என்று சொல்லி, அதை நம்பும்படியும் செய்து, அரண்மனைக்கு வந்திருக்க முடியுமா? வைத்தியர் மகனிடமிருந்துதான் அவ்வளவு எளிதில் தப்பி வந்திருக்க முடியுமா? இந்தப் படகில் ஏறித் தங்கள் திருமுகத்தைப் பார்த்தவுடனேதான், மது உண்டவனைப் போல் மதிமயங்கிப் போய் விட்டேன்!'' என்று சொன்னான் வந்தியத்தேவன்.

''ஐயா! அப்படியானால், என் முகத்தைத் தாங்கள் பார்க்க வேண்டாம். இந்த ஓடையின் தெளிந்த நீரைப் பாரும். நீல வானத்தைப் பாரும். ஓடைக் கரையில் வானளாவி வளர்ந்திருக்கும் மரங்களைப் பாரும். அரண்மனை மாடங்களைப் பாரும். பளிங்குக் கல் படித்துறைகளைப் பாரும். இந்த ஓடையில் பூத்திருக்கும் ஆம்பல் மலர்களையும் செங்கழுநீர்ப் பூக்களையும் பாரும். அல்லது இந்தச் செவிட்டு ஓடக்காரனின் முகத்தையாவது சற்றே பாரும். அவ்விதம் பார்த்துக் கொண்டே தாங்கள் போன காரியம் என்ன ஆயிற்று, காயா பழமா, என்று சொல்லும். இளவரசரை அழைத்து வந்தீரா, சௌக்கியமாக இருக்கிறாரா, எங்கே விட்டு வந்தீர், யாரிடம் விட்டு வந்தீர் என்று முதலில் தெரியப்படுத்தும். பிறகு, இங்கிருந்து புறப்பட்டது முதல் நடந்தவை எல்லாவற்றையும் சொல்லும்!'' என்று இளவரசி கூறினாள்.

அதற்கு வந்தியத்தேவன், ''தேவி! தங்களிடம் ஒப்புக் கொண்டு போன காரியத்தை வெற்றிகரமாக முடித்திராவிட்டால், தங்களிடம் திரும்பி வந்து என் முகத்தைக் காட்டியிருப்பேனா? இளவரசரை இலங்கையிலிருந்து அழைத்துக் கொண்டு வந்தேன். அதற்கேற்பட்ட ஆயிரம் இடையூறுகளையும் வெற்றி கொண்டு அழைத்து வந்தேன். இளவரசர் சுகமாயிருக்கிறார் என்று நான் சொல்ல முடியாது. நான் அவரை விட்டுப் பிரியும் போது அவருக்குக் கடுமையான சுரம். ஆனால் பத்திரமான கைகளில் அவரை ஒப்படைத்து வந்திருக்கிறேன். ஓடக்காரப் பெண் பூங்குழலியிடமும், பூக்காரச் சிறுவன் சேந்தன் அமுதனிடமும் இளவரசரை விட்டு வந்திருக்கிறேன். அவர்கள் இளவரசரைக் காப்பாற்றுவதற்காக நூறாயிரம் தடவை வேண்டுமென்றாலும் தங்கள் உயிரைக் கொடுக்கக் கூடியவர்கள்!" என்றான்.

அச்சமயம் தூரத்தில் பயங்கரமான, குழப்பமான, அநேகாயிரம் குரல்களின் ஒருமித்த ஓலம் போன்ற சத்தம் எழுந்தது. சத்தம் வந்த திசையை அரசிளங்குமரியும் வந்தியத்தேவனும் பயத்தோடும் கவலையோடும் நோக்கினார்கள்.

''அது என்ன ஆரவாரம்? கோபங் கொண்ட ஜனத் திரளின் கூக்குரல் போல் அல்லவா இருக்கிறது?''

''ஆம்; அப்படித்தான் தோன்றுகிறது!'' என்றான் வந்தியத்தேவன்.

(தொடரும்)



# பற்றுக்கோல்

சுப்ர. பாலன்

ஏதையும் அவசரப்பட்டுச் செய்கிறவனில்லை சிந்தூரன். நின்று நிதானித்துச் சாவகாசமாகத்தான் — ஆனால் அதற்காகச் சுறுசுறுப்பில்லை என்றும் சொல்லி விட முடியாது.

பலமுறை யோசித்த பின்னும் அவனுக்கு இதுவே சிறந்தது என்று தோன்றியது. பதினான்கு நாட்களாக அவனால் முடிந்த அளவு பார்த்து விட்டான். அவனுக்கு மட்டுமே தெரிந்த உண்மையை யாரும் ஏற்கத் தயாராக இல்லை.

இறுதி விசாரணையும் முடிந்து விட்டது. சனி ஞாயிறு போனால் திங்கட் கிழமையன்று காலையில் அவனுக்கு உத்தரவு கிடைத்து விடும்.

"..... உங்கள் மீது சாட்டப்பட்டுள்ள குற்றங்கள் நிரூபிக்கப்பட்டு விட்ட நிலையில், உங்களால், குற்றங்களை மறுத்து ஆதாரம் காட்ட முடியாத நிலையைக் கருத்தில் கொண்டு......" என்று வழக்கமான சிலந்தி வலை மொழி நடையில் ஓர் ஆணை அவனுக்குக் கிடைத்து விடும்.

முப்பது ஆண்டுப் பொதுப் பணியில், அலுவலக ஒழுக்கத்தைப் பொறுத்தவரை அவன் நெருப்பாகவே இருந்திருக்கிறான். எந்த மகாசக்தியும் அவனைப் பணிய வைக்க முடியவில்லை. சபலங்களுக்கும் அரசியல் நிர்ப்பந்தங்களுக்கும் ஈடு கொடுக்கக் கூடிய அதிகாரிகள் கூடச் சிந்தூரனின் வழியில் குறுக்கிடத் துணிவு பெற்றதில்லை.

'பொதுப் பணியில் இவ்வளவு கெடுபிடியுடன் இருப்பது நல்லதில்லை, சிந்தூரன். என்றைக்காவது யாரும் காப்பாற்ற முடியாத அளவில் அகப்பட்டுக் கொள்ள நேரிடும்.... என்று கொஞ்சம் ஞான திருஷ்டியுடனேயே எச்சரித்தார் முந்தைய தலைமை அலுவலர் மார்ட்டின்.

இன்று அந்த 'என்றைக்காவது' பலித்து விட்ட வேளையில் மார்ட்டின் உயிருடன் இல்லை. இருந்திருந்தால் சிந்தூரனின் இந்த நிலைமைக்காகப் பெரிதும் உடைந்து போயிருப்பார் அவர்.

அலுவலகத்துக்குள் கம்பீரமாக நுழைந்து பதினான்கு நாட்களாகி விட்டன. பிரச்னை விசுவரூபமெடுத்து விட்டதால், தலைமையகத்திலிருந்தே விசாரணைக் குழுவினர் வந்து முகாமிட்டு விட்டார்கள். இப்போது 'புழுக்கள்' எல்லாம் கூட ஏளனமாக அவனை நிமிர்ந்து பார்க்கின்றன.

தவறான ஒரு நிறுவனத்துக்கு, விதிமுறைகளைப் புறக்கணித்து அனுமதி வழங்கியிருப்பதாக ஒரு புகார். அதற்காகப் பெரும்

தொகையைச் சிந்தூரன் லஞ்சமாகப் பெற்றிருப்பதாகக் குற்றச்சாட்டு.

புகார்க் கடிதம் அவனுடைய பார்வைக்குத் தரப்பட்டு விளக்கம் கேட்கப்பட்ட போது, அவன் அதிர்ச்சியடையவில்லை. வெகுளித்தனமாகச் சிரித்தான். 'அற்பப் பதர்கள்' என்கிற மாதிரி அலட்சியப்படுத்தினான். 'புகார்கள் விஷமத்தனமானவை. லஞ்சத் தொகை எதையும் நான் வாங்கவில்லை. அப்படியொரு அவசியமும் எனக்கு இல்லை' என்று மிகச் சுருக்கமாக நேர்மைத் திமிரோடு விளக்கத்தை எழுதி அனுப்பி விட்டு, அன்று வீடு திரும்பிய போது கூட அவன் நிமிர்ந்தேதான் நடந்தான்.

ஆனால் —

அவன் வீடு திரும்பிய நேரத்தில், சொல்லி வைத்த மாதிரி குற்றத்துறைப் புலனாய்வுப் பிரிவினர் வந்ததும், அவனுடைய அறை முழுவதையும் சோதனையிட்டுப் புத்தக அலமாரியிலிருந்து நூறு ரூபாய்க் கட்டுக்களாகப் பத்தாயிரம் ரூபாயைக் கைப்பற்றியதும் சிந்தூரனைக் குழப்பியது!

கண்ணி வைத்துப் பிடிப்பது; பொறி வைத்துப் பிடிப்பது; குழி தோண்டிப் பிடிப்பது... என்றெல்லாம் பிராணி வேட்டையில் கேள்விப்பட்டதுண்டு. மனிதர்களையும் அப்படிப் பிடித்துவிட முடியும் என்பதை அவன் இன்று நேருக்கு நேராகக் கண்டுவிட்டான். அவனுக்கு ஆச்சரியமெல்லாம் இந்தப் பணம் தன்னுடைய புத்தக அலமாரியில் எப்படி வந்து அமர்ந்து கொண்டது என்பதைப் பற்றி மட்டும் தான்.

'இந்தப் பணம் என்னுடையதில்லை. எப்படி வந்தது என்பது எனக்குத் தெரியாது' என்று சிந்தூரன் சொன்ன போது, பழகிப் போன குற்றப் பார்வைகளுக்கு அது சத்தியம் என்பது புரியவில்லை. எல்லாக் குற்றவாளிகளுமே இப்படித்தான் சொல்வார்கள் என்பதால் சிந்தூரனின் வாக்கு மூலம் எடுபடவில்லை.

"நான்தான் கொடுத்தேன். அவ்வளவும் நூறு ரூபாயாக வேண்டும் என்று சொன்னதால் அப்படியே மாற்றிக் கொடுத்தேன்..." என்று வாக்கு மூலம் பதிவானது. அப்படியொரு பேர்வழியையே பார்த்ததாகத் தனக்கு நினைவில்லை என்றுதான் அவன் பதில் வாக்கு மூலம் தர முடிந்தது.

'தாடி வைத்துக் கொண்டு, கட்டம் போட்ட சட்டை, வெள்ளை வேட்டியோடு ஓர் ஆள். அந்த ஞாயிற்றுக்கிழமை காலை ஏழு மணிக்கு மாடிக்குப் போனதாக — வீட்டுச் சொந்தக்காரர் தந்த சாட்சியம் வலுவாக இருந்தது. அந்தக் குறிப்பிட்ட நேரத்தில் மாடி அறையைப் பூட்டிக் கொண்டு சிந்தூரன் கீழே போனதையோ, குளித்து விட்டுச் சாவகாசமாக மேலே வந்த போது வானொலிச் செய்தி தொடங்கியிருந்தது என்பதையோ அவர் கவனித்திருக்க வாய்ப்பில்லை.

இடைப்பட்ட காலத்தில் மாடியேறி வந்த கட்டம் போட்ட சட்டை, தாடி மனிதன் யார் என்பது பற்றி அவனுக்குத் தகவலில்லை.

சென்ற ஆண்டு குறிப்பிட்ட ஒரு நிறுவனம் — அரசுத் தரப்பிலுள்ளவர்களுக்கு மிகவும் வேண்டிய புள்ளியுடையது — அனுமதி வேண்டிய போது, விதி முறைகளுக்கு உட்பட்டு அந்த நிறுவனம் தொடங்கப்படவில்லை என்பதைச் சுட்டிக் காட்டிச் சிந்தூரன் குறிப்பு அனுப்பினான். வழக்கப்படி மரியாதையாகச் சொல்லிப் பார்த்தார்கள்.

"விதிகளை நான் சொல்லி விட்டேன். மறுப்பதும் சிறப்பு வழக்காக என்று விதிகளைத் தளர்த்தி அனுமதி வழங்குவதும் மேலிடம் பார்த்துச் செய்யட்டுமே..." என்று வெட்டிக் கொண்டான். அனேகமாக அதே அமைப்பினர்தான் இப்போது பழிவாங்கியிருக்கக் கூடும் என்று சிந்தூரனுக்கு வேண்டிய நண்பர்கள் காதைக் கடித்தார்கள். ஊகங்களை மட்டும் வைத்து அவனால் செய்யக் கூடியது ஒன்றுமில்லை. அதுவும் புதிய தலைமை அதிகாரி ஆளுந்தரப்பினர், என் என்றால் எண்ணெயைத் தேடுகிற ரகம்.

பலருக்கும் அந்த அலுவலகத்தில் சிந்தூரன் தொடர்ந்திருப்பது வசதிக் குறைவானதாக இருந்தது. சமயம் பார்த்திருந்தார்கள். அவனைத் 'தீர்த்துக் கட்ட' ஏற்பாடு செய்தாயிற்று.

**அ**ந்தக் குறிப்பிட்ட நிறுவனத்துக்கு அனுமதி தரவேண்டும் என்று கூடச் சிந்தூரன் பரிந்துரை எதையும் செய்யவில்லை. விதிமுறைகளை மட்டும் சுட்டிக் காட்டி அவை நிறைவு செய்யப்பட்டுள்ளன என்பதை மட்டுமே அவன் குறிப்பெழுதியிருந்தான். அவர்கள் மோசடியான கும்பல் என்பதோ, அளித்துள்ள ஆதாரத் தகவல்கள் போலியானவை என்பதோ அவன் அறியாதவை. 'பணம் வாங்கிக் கொண்டு' அனுமதித்து விட்டான் என்று எழுதப்பட்டிருந்த 'மொட்டைக் கடிதம்' வரப் போகச் சந்தர்ப்பச் சாட்சியங்களின் அடிப்படையில் அவன் குற்றவாளியாக நிரூபிக்கப்பட்டு விட்டான்.

திங்கட்கிழமை காலை பதினோரு மணி வாக்கில் தரப்படவிருக்கும் பணிநீக்க ஆணையைப் பெறக் கூடிய நிலையைத் தவிர்த்து விட வேண்டும் என்று சிந்தூரன் முடிவு செய்தான். மரணம் ஒன்றைத் தவிர வேறு சுலபமான முடிவு — அவனுக்குத் தோன்றவில்லை. அது கோழைத்தனம்தான். ஆனாலும் பதினான்கு நாட்களாகத் தன் மீது குற்றமில்லை என்பதை நிரூபிக்க அவனால் முடியவில்லை. குறைந்தபட்சம் பூட்டிய அறைக்குள் அவனுடைய கவனத்துக்கும் தப்பி இந்தப் பணம் எப்படி வந்தி



**திருடன் 1:** "எங்கே அண்ணே போயிட்டு வர்றீங்க?"

**திருடன் 2:** "போலீஸ் ஸ்டேஷனுக்குத் தான்!"

**திருடன் 1:** "ஏன் ஏதாவது கேஸிலே சந்தேகப்பட்டு விசாரிச்சாங்களா?"

**திருடன் 2:** ஊகூம். தொழில் வரி கட்டிட்டு வர்றேன். அவ்வளவுதான்!"

— கடுவை கோபால்சாமி.

---

ருக்கும் என்பதையும் அவனால் சொல்ல முடியவில்லை.

'நான்தான் கொடுத்தேன்... என்று ஒரு பொய்யையும் ஏற்பாடு பண்ணிவிட்டார்கள்.

திங்கட்கிழமை காலை ஒன்பது மணி அளவில் அதை நிறைவேற்றி விட வேண்டும் என்று உறுதி செய்து கொண்டான். சுலபமான வழியாகக் குளியலறையில் நெருப்புக் குளியல் என்பது பட்டது. ஊருக்கெல்லாம் முப்பதாண்டுக் காலம் நெருப்பாக இருந்த தன் நிலை இப்படியாகும் என்று அவன் கனவு கூடக் கண்டதில்லை.

வெறுமனே செத்துவிடக் கூடாது. சம்பந்தப்பட்டவர்கள் அனைவருக்கும் கடிதம் எழுதித் தபாலில் சேர்த்து விட்டு இதைச் செய்ய வேண்டும் என்று முடிவு செய்தான். மரண தண்டனைக் கைதி முதல் நாள் இரவில் தவித்துக் கூக்குரல் இடுவான் என்று படித்திருக்கிறான். சித்தூரன் கூக்குரல் எதையும் இடவில்லை. தவிப்பு மட்டும் அபரிமிதமாக இருந்தது.

இரவு பன்னிரண்டைத் தாண்டிய நேரம். மேஜை விளக்கைப் போட்டுக் கொண்டு ஒரு வாக்குமூலக் கடிதத்தை எழுதினான். சுருக்கமாக எழுதுவதுதான் அவனுக்குப் பிடிக்கும்.

...நான் குற்றவாளியில்லை என்பதை நிரூபிக்க முடியவில்லை. எனக்கு ஆதரவான சாட்சியங்களும் இல்லை... வழங்கப்படப் போகிற வேலை நீக்கத் தண்டனையைவிட மேலும் தீவிரமான தண்டனையை நானே விதித்துக் கொள்கிறேன். என்னுடைய மரணத்துக்கு நான் மட்டுமே பொறுப்பு... உண்மை என்றைக்காவது வெல்லும் என்பதைச் சாகும் போதும் நான் நம்புகிறேன்... ஸத்ய மேவ ஜயதே...'

எழுதியதைப் படித்துப் பார்த்தான். சரியாகவே அமைந்து விட்டதாகத் தோன்றியது. யார் யாருக்கு அனுப்புவது? பட்டியலிட்டான். நீள நீளமான உறைகளில் தெளிவான எழுத்தில், முகவரிகளை எழுதினான். காவல்துறை அதிகாரி, அலுவலகத் தலைவர், சென்னையிலுள்ள தலைமை அலுவலகம், சாட்சி சொன்ன வீட்டுக்காரக் கிழவர், அவன் கணக்கு வைத்திருந்த வங்கி, உறவு என்று சொல்லிக் கொள்ள இருந்த அண்ணன்... இன்னும்...

உறைகளை எழுதிவிட்டு வாக்குமூலக் கடிதத்தை நகல் எடுத்தான். எல்லாவற்றையும் எழுதி உறையிலிட்டு மூடித் தபால் தலைகளை ஒட்டிவிட்டு நிமிர்ந்த போது மணி இரண்டாகியிருந்தது.

வெளியே மின்விளக்கு வெளிச்சத்தில் தபால் பெட்டி வாயைப் பிளந்து கொண்டு நின்றது. 'இப்போது என்ன அவசரம்...? காலையில் தருகிறேன்' என்று சொல்லிக் கொண்டே கடித உறைகளை எண்ணிப் பார்த்தான். பத்து உறைகள் இருந்தன. காலையில் ஏழரை மணிக்குத் தபால் அள்ளிச் செல்லப்பட்ட பின்னர் 'அக்னிப் பிரவேசம்' என்று எண்ணிக் கொண்டான். அந்த நிலையில் தூக்கம் அசத்தியது. நாற்காலியில் அமர்ந்தவாறே உறங்கிப் போனான். மனத்தின் சுமைகளைத் தாள்களில் இறக்கி வைத்துவிட்ட பின்னர் அந்த உறக்கம் சுலபமாக வந்துவிட்டது.

**மீ**ண்டும் கண்விழித்த போது —

அவனாகக் கண்விழிக்கவில்லை. தோளில் காதோரத்தில் ஏதோ உறுத்தி அவன் உறக்கம் கலைந்தது. திரும்பிப் பார்த்தான்.

"என்ன மாமா? இன்னுமா தூங்கறீங்க?" — கீழ்ப் போர்ஷனில் குடியிருக்கும் சிறுமி நீண்ட குச்சியின் நுனியில் ரப்பர் பொம்மையைக் கட்டி... ஜன்னல் வழியாக அவனைத் தொட்டது...

அவனுக்குப் பொறி தட்டியது... ரொம்பவும் சின்ன விஷயம். இது தோன்றவில்லையே! எப்படி இந்தப் பெண்...?

"கோச்சுக்காதீங்க மாமா... இப்படித்தான் அன்றைக்கு அந்தத் தாடி மாமா குச்சியை நீட்டி..."

அவனுக்கு அதுவே போதுமானதாக இருந்தது. கடிகாரத்தில் மணி ஏழு அடித்தது... கடித உறைகளை எடுத்துக் கொண்டு கீழே போனான். தபால் பெட்டியை ஏமாற்றி விட்டுக் குளியலறைக்குப் போனான். கடித உறைகளைச் சுக்கலாகக் கிழித்துக் குளியலறை மூலையில் போட்டு முதல் நாளே கொண்டு போய் வைத்திருந்த மண்ணெண்ணெயை ஊற்றிப் பற்ற வைத்தான்.

உடம்பு, மனம் எல்லாம் குளிரக் குளிர... ஆசைதீரத் தண்ணீரில் குளித்தான். தண்டனை எப்படியானாலும் ஆகட்டும். ஒரு சின்னத் தடயம் கிடைத்துவிட்டது. அப்பீல் அது இது எல்லாம் இருக்கிறதே பார்க்கலாம் என்று யோசித்த போது —

வழக்கமான நிமிர்வு வந்தது. அலுவலகத்தில் நிமிர்ந்த நடையோடு அவன் மீண்டும் நுழைந்தான்...

# செக்ஷன் 302 படி...

## 26

திருச்சியை விட்டு ஷியாமின் கார் புறப்பட்ட அதே நேரம், சென்னையில் தீபக் தனது ஸ்கூட்டரை ஷியாமின் தனி வீட்டின் முன்னால் நிறுத்தினான்.

அவனிடம் எப்போதும் ஷியாம் வீட்டின் ஒரு சாவி உண்டு. ஷியாம் இல்லாத நேரத்திலும் திறந்து கொண்டு உள்ளே வந்து டேப் ரெக்கார்டர் போட்டுக் கேட்பான், டெலிவிஷன் பார்ப்பான். ரெஃப்ரிஜிரேட்டரில் இருந்து மது எடுத்துக் குடிப்பான். போன் செய்வான்.

இப்போது அந்த வீட்டுப் பக்கமாகக் கடந்த போது, திடீரென்று திண்டுக்கலுக்கு ஒரு நண்பருக்கு போனில் சொல்ல வேண்டிய செய்தி நினைவுக்கு வந்தது.

ஆகவே, தீபக் ஸ்கூட்டரை நிறுத்தி விட்டு, சாவி போட்டுக் கதவைத் திறந்து உள்ளே வந்தான். நேராய் போனுக்குச் சென்று திண்டுக்கல் நண்பருடன் எஸ்.டி.டி. கால் போட்டுப் பேசினான்.

முடித்து விட்டு எழுந்து மணி பார்த்தான். உடனடியாக வேலை எதுவுமில்லை. நிறைய நேரமிருந்தது. கதவைச் சாத்தி விட்டு ரெஃப்ரிஜிரேட்டரைத் திறந்தான். உள்ளே பாதி பாட்டில் வரை இருந்த பிராந்தி குலுங்கியது. குளிர் பானம் ஒன்றும் எடுத்துக் கொண்டான்.

ஸோபாவில் அமர்ந்து நிதானமாக இரண்டு பெக் குடித்து முடித்து, ஒரு சிகரெட்டையும் கொளுத்திக் கொண்ட பின்னர் ஷியாமைப் பற்றி யோசித்தான்.

திருச்சிக்கு நிவிதாவின் கல்யாணத்திற்குப் போயிருக்கிறான். கல்யாணத்தை நிறுத்தப் போவதில்லை என்றான். ஆனால் அதே சமயத்தில் ஏதோ ஒரு வகையில் பழி வாங்கப் போவதாகவும் சொன்னான்.

என்ன செய்தானோ? என்ன நடந்ததோ? வழக்கமாக எதையும் விலாவரியாக என்னிடம் சொல்வான். இந்த முறை பிடிவாதமாகச் சொல்ல மறுத்து விட்டான். மகா கோபக்காரன். பாவம் நிவிதா! எப்படி அவமானப்படுத்தினானோ? என்னால் இயன்ற வரை அறிவுரை சொல்லிப் பார்த்து விட்டேன். ம்கூம். கேட்பதாக இல்லையே. முதலிலேயே அவன் திட்டத்திற்கு நான் ஒத்துழைப்பு தந்திருக்கக் கூடாது.

சிந்தித்துக் கொண்டே திரும்பியவன் டீப்பாயின் அடியில் ஷியாமின் அகலமான டைரியைப் பார்த்தான்.

ஷியாம் தினம் விடாமல் தன் எண்ணங்களை டைரியில் எழுதுபவன் என்பது தீபக்கிற்குத் தெரியும். ஆனால் ஒரு நாள் கூட நாகரிகம் முன்னிட்டு அதைத் தொட்டுக் கூடப் பார்த்ததில்லை.

இன்று திடீரென்று நிவிதா குறித்து, அவள் திருமணம் குறித்து என்ன எழுதி இருக்கிறான் என்பதை அறிந்து கொள்ளும் ஆவல் ஏற்பட்டது.

தீபக் சட்டென்று அந்த டைரியைக் கையில் எடுத்தான்.

காரை நிதானமாகச் செலுத்தினான் ஷியாம். காரின் டேப்பில் சினிமா பாடல் சன்னமாக ஒலித்துக் கொண்டிருக்க, வினோத் குமார் தனக்கும், நிவிதாவுக்கும் எப்படி காதல் ஏற்பட்டது என்பதை விவரமாகச் சொல்லிக் கொண்டிருந்தான்.

பின் சீட்டில் சாய்ந்திருந்த நிவிதா காலையில் மிக முன்னதாக விழித்து விட்டகளைப்பிலும், கார் ஜன்னல் வழியாகச் சீராக வீசின இதமான காற்றின் தாலாட்டினாலும், கார் ஓட ஆரம்பித்த சிறிது நேரத்திலேயே உறங்க ஆரம்பித்திருந்தாள்.

ரியர் வ்யூ கண்ணாடியில் அவள் உறங்குவதைப் பார்த்த ஷியாம், தனது பாக்கெட்டில் இருந்து சிகரெட் எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு அந்தச் சிறிய ஊரின் ஒரு டீக்கடை முன்பாகக் காரை நிறுத்தினான் அதிக ஓசையில்லாமல்.

''வாங்க வினோத், ஒரு டீ சாப்பிடலாம். அவங்களுக்கு எதுவும் வேணுமான்னு கேளுங்க'' என்று இறங்கினான் ஷியாம்.

''நல்லாத் தூங்கறா. வேணாம். ரெண்டு சொல்லுங்க. போதும்.''

ஷியாம் இரண்டு டீ சொல்ல.... வினோத் குமார் பேப்பர் எடுத்துப் படித்துக் கொண்டிருக்க, ஒரு டீயில் யாரும் அறியாமல் அந்த மாத்திரையைப் போட்ட ஷியாம், ''இந்தாங்க'' என்று நீட்டினான்.

வினோத் குமார், ''தாங்க் யூ'' என்று

பட்டுக்கோட்டை பிரபாகர்



"ஒரேயொரு அயிட்டத்தைத் தவிர பாக்கி எல்லாம் இந்த ஹோட்டலில் நல்லாயிருக்கும்!"

"என்ன அது?"

"பில்!"

— கீழை. அ. கதிர்வேல்.

சொல்லி மடக், மடக் என்று குடித்து விட்டு வைத்து, "போகலாமா?" என்றான்.

மீண்டும் காரில் பயணம் ஆரம்பித்துப் பத்து நிமிடத்தில்...

"என்னமோ பண்ணுது ஷ்யாம்" என்றான் வினோத் குமார்.

"வாமிட்டிங்?"

"இல்லை. நெஞ்சை அடைக்கிற மாதிரி... ஒரு மாதிரி மயக்கமா..." என்று குழறினான். வாயால் சுவாசித்தான்.

சில நிமிடங்களில் முழுமையாக மயக்கத்தில் ஆழ்ந்து அப்படியே அமர்ந்த நிலையில் சரிந்தான் வினோத் குமார். முன் சீட்டில் நடப்பது எதுவுமே உணராத ஆழ்ந்த உறக்கத்தில் இருந்தாள் நிவிதா.

பயணம் தொடர....

எங்கே, எப்போது வைத்துக் கொள்ளலாம் என்று யோசித்தான் ஷ்யாம்.

தீபக் டைரியைப் புரட்டி நேற்றைய தேதிக்கு வந்தான்.

நேற்றைய தேதியில் அந்தப் பக்கம் முழுவதும் எழுதப்பட்டிருந்தது. படிக்க ஆரம்பித்தான்.

'இன்று நிவிதாவின் திருமணத்திற்காகத் திருச்சி புறப்படுகிறேன். நாளைக்குத்தான் வஞ்சம் தீர்க்கும் நாள். ஒரு மாதத்திற்கும் மேல் நான் பொறுமையாகக் காத்திருந்தது நாளைய தினத்திற்காகத்தான். நடந்ததைச் சுத்தமாக மறந்தவன் போல், என் மேல் பரிதாபமும், அன்பும் ஏற்படும் விதத்தில் கல்யாண சமயத்தில் நடந்து கொள்ளப் போகிறேன். வினோத் குமாரையும், நிவிதாவையும் என்னோடு காரில் வர அழைப்பேன். ஒப்புக் கொள்வார்கள் என்று எதிர்பார்க்கிறேன். ஒப்புக் கொள்ளவில்லை எனில் சென்னையில் வேறு ஒரு மாற்றுத் திட்டம் வைத்திருக்கிறேன். ஒப்புக் கொண்டால் பயண வழியில் வினோத் குமாரை அவனறியாமல் மாத்திரை மூலம் மயக்கத்தில் ஆழ்த்தி விட்டுத் துப்பாக்கி முனையில் பேரம் பேசப் போகிறேன். கற்பு வேண்டுமா, கணவன் வேண்டுமா? கணவன்தான் வேண்டும் எனத் தீர்மானித்தால், காரிலேயே அவளை நான் அவள் சம்மதத்துடன் அனுபவிப்பேன். கற்புதான் வேண்டும் என்றால் அவள் கண்ணெதிரிலேயே வினோத் குமாரைக் கொலை செய்வேன். நான் தண்டனை அடைவது பற்றி எனக்குக் கவலையே இல்லை. திருமணமாகி ஏராளக் கனவுகள் சுமந்து, இன்னும் புருஷ சுகம் கூட அறியாமல் விதவையாகிக் காலம் முழுவதும் கலங்கப் போகிறாளே நிவிதா, அதை விடப் பெரிய தண்டனை எனக்குக் கிடைக்கப் போவதில்லை. எப்படிப் பார்த்தாலும் நிவிதா என்னிடம் தோற்கிறாள். தோற்கிறாள். தோற்கிறாள். நான் எப்போதும் போல ஜெயிக்கிறேன். ஜெயிக்கிறேன். ஜெயிக்கிறேன்.'

படித்து முடித்ததும் தீபக்கிற்குப் போதை பறந்து விட்டது. டைரியைப் பிடித்திருந்த கரங்கள் நடுங்கின. பதற்றம் தொற்றியது.

முட்டாள்! மெண்டலி மிகவும் பாதிக்கப்பட்டு விட்டவன். நிச்சயமாக இதில் எழுதியுள்ளபடி செய்தாலும் செய்வான். செய்தாலும் என்ன, செய்வான்! இதற்காகவே வாரக் கணக்கில் காத்திருந்தவன்.

நிவிதா பாவம். திருமணத்திற்குப் பின் ஒரு பெண்ணைத் தவறாகப் பார்ப்பது மாபெரும் தப்பு. நிவிதா நிச்சயம் உயிரே போனாலும் இணங்க மாட்டாள். ஷ்யாம் படு பிடிவாதக்காரன். துப்பாக்கி எடுத்துப் போயிருக்கிறான். வினோத் குமாரைச் சுடத் தயங்க மாட்டான். தான் மாட்டிக் கொள்வதையோ, பின் விளைவுகளையோ யோசிக்கிற மனநிலையில் இல்லை அவன். எப்படியும் நிவிதாவை அடைய வேண்டும் அல்லது வாழ்நாள் முழுக்கத் துடிக்க வைக்க வேண்டும் என்கிற வெறியில் இருக்கிறான்.

தடுக்க வேண்டுமே....

விபரீதம் எதுவும் நிகழ்ந்து விடாமல் தடுக்க வேண்டுமே.

என்ன செய்யலாம்?

இந்த நேரம் திருச்சியில் என்ன நடந்து கொண்டிருக்கிறதோ? காரில் இவனுடன் அவர்கள் புறப்பட்டார்களோ, இல்லையோ.. கடவுளே, இவனுடன் பயணம் செய்ய அவர்கள் சம்மதித்திருக்கக் கூடாது.

என்ன செய்வேன் நான்? டைரியில் புரட்டி நிவிதாவின் வீடு போன் நம்பரை அவசரமாகத் தேடிக் கண்டுபிடித்துச் சுழற்றினான்.

"எக்ஸ்க்யூஸ் மி மேடம். நிவிதா இருக்காங்க இல்லையா, அவங்களோட திருச்சி அட்ரஸ்ல போன் நம்பர் எதுவும் கொடுத்திருக்காங்களா? எதுக்கா? ஒரு முக்கியமான செய்தி சொல்லணும். ப்ளீஸ், பார்த்துச் சொல்லுங்க. ரொம்ப அர்ஜண்ட்."

தீபக் நகம் கடித்துத் துப்பிக் கொண்டு காத்திருந்தான்.

திருச்சியை விட்டு விலகிச் சரியாக

முப்பத்தி ஆறாவது கிலோ மீட்டரில் காரை முக்கிய சாலையில் இருந்து பிரிந்த ஒரு மண் சாலையில் இறக்கி நிறுத்தினான் ஷ்யாம். வேண்டுமென்றே கொஞ்சம் சடன் பிரேக் போட்டுக் குலுக்கி நிறுத்தினான்.

குலுக்கலில் விழித்துக் கொண்ட நிவிதா முன் சீட்டில் சரிந்திருக்கும் வினோத் குமாரை முதலில் தூங்குகிறான் என்றுதான் நினைத்தாள். பிறகு கார் முக்கிய சாலையில் இருந்து பிரிந்து நிற்பதையும், ஷ்யாம் காரை விட்டிறங்கி ஒவ்வொரு கதவாகத் திறந்து அதன் கண்ணாடிகளை ஏற்றி விடுவதையும் நிழல் வடிவமாகத்தான் பார்க்க முடிந்தது.

''என்ன இது? எங்கே நிக்கிது கார்? எதுக்காகக் கண்ணாடி எல்லாம் ஏத்தி விடறீங்க? வினோத்! வினோத்'' என்று கலவரமாக வினோத் தோளில் தட்ட....

டிரைவிங் சீட் கதவைத் தவிர மூன்று கதவுகளையும் சாத்தி விட்டு ஷ்யாம், ''நிவிதா, அவரைத் தொந்தரவு செய்யாதே. மயக்கத்திலே இருக்கார்'' என்று சைடில் திரும்பி உட்கார்ந்து கொண்டு, காரின் உள் விளக்கைப் போட்டான்.

''மயக்கமா?''

''ஆமாம். நான்தான் மாத்திரை கலந்து கொடுத்தேன். மூணு மணி நேரத்துக்கு அசையக் கூட மாட்டான். யானையை விட்டு மிதிக்கச் சொன்னாக் கூட கண் திறக்க மாட்டான். கொஞ்சம் ஸ்ட்ராங்கான டோஸ். ஏண்டி என்னை என்ன இளிச்சவாயன்னு நினைச்சியா? இதைப் பார்த்தியா? சினிமாவுலதான் நீ துப்பாக்கி பார்த்திருப்பே. இது தான். இப்ப, நான் என்ன செய்யப் போறேன் தெரியுமா? உன் புருஷனை உன் கண் எதிர்க்கவே சுடப் போறேன்.''

''ஷ்யாம்! வேணாம், அய்யோ! வேணாம்.''

''வேணாம்னா சில கண்டிஷன்ஸ் இருக்கும்மா நிவிதா. நம்பர் ஒன். இப்படிக் கத்திப் பேசாதே. நம்பர் டூ. காரோட கதவைத் திறந்துக்கிட்டுக் கீழே இறங்க முயற்சி செய்யாதே. நம்பர் த்ரீ. காப்பாத்துங்கன்னு கத்தி யாரையாச்சும் உதவிக்குக் கூப்பிடாதே. நம்பர் ஃபோர். என்கிட்டேர்ந்து எப்படி துப்பாக்கியைப் பறிக்கலாம்னு குறுக்கு யோசனை செய்யாதே. நம்பர் ஃபைவ். நான் உனக்குக் கொடுக்கிற முப்பது நிமிஷத்துக்குள்ளே ஒரு முடிவுக்கு வந்துடு. அதே கோரிக்கைதான். நான் உன்னை அணைச்சுக்கணும். இப்பவும் நோ வயலன்ஸ். நீயா உன்னை எனக்குத் தரணும். பத்து நிமிஷம் நமக்குப் போதும். உன் புருஷன் மயக்கத்தில இருக்கான். கார் பின் சீட்ல நிறைய இடம் இருக்கு. பதினோராவது நிமிஷம் நாம ரெண்டு பேருமே நடந்ததை மறந்துடலாம். வாழ்க்கை பூரா உன் புருஷனோட சந்தோஷமா இரு. அப்புறம் நான் குறுக்கே வரவே மாட்டேன் சத்தியமா. என்ன சொல்றே?''

பிரமித்துப் போய் அமர்ந்திருந்தாள் நிவிதா.

''ஷ்யாம்! ப்ளீஸ்... உங்களை எவ்வளவு தூரம் நம்பி நாங்க வந்தோம்? வேணாம். இதெல்லாம் வேணாம். வாழ்க்கையோட விளையாடாதீங்க.''

''நிவிதா, நோ ஆர்க்யுமெண்ட்ஸ் நவ். போதுமான அளவு ஏற்கெனவே நாம விவாதிச்சாச்சு. என் முடிவில மாற்றம் இல்லை. ஒரு தடவை என்னோட சந்தோஷமா இரு. இல்லை உன் புருஷனை, உன்



வாழ்க்கையை, உன் சந்தோஷத்தை, எல்லாத்தையும் என் ஒரு குண்டுக்குப் பலி கொடுத்துட்டுக் காலம் பூராக் கண்ணீர் விடு. இந்த இரண்டு சாய்ஸ்தான். இப்பக் கூட நான் உன்னைப் பலாத்காரம் செய்ய விரும்பலை. விரும்பி நீ வரணும். அதுக்கு உன் மனசைத் தயாராக்கிக்கத்தான் இந்த முப்பது நிமிஷம். யோசி. கத்தினாலும், காரை விட்டு இறங்கினாலும் வினோத் குமாரைச் சுடுவேன். நினைவு வச்சிக்கோ."

ஷியாம் காரை விட்டு இறங்கினான். முன் பக்கம் பானெட்டில் குதித்து அமர்ந்து கொண்டான். காருக்குள்ளே பரிதவிக்கும் நிவிதாவை மமதையாகப் பார்த்தான். நிமிடங்கள் நகர அனுமதித்துக் காத்திருந் தான்.

தீபக் படபடப்பாக விடுதியில் பி.பி. என் என்று கொடுத்த எண்ணை எஸ்.டி. டி.யில் தொடர்பு கொண்டு, "சார், உங்க பக்கத்து வீட்லயோ, எதிர்த்த வீட்லயோ இருக்கிற மிஸ் நிவிதாவை உடனே பேசச் சொல்லுங்க, லைன்ல இருக்கேன்" என் றான்.

சில வினாடிகளில், "ஹலோ, நான் நிவி தாவோட தம்பி வித்யா சாகர் பேசறேங்க. நீங்க யாருங்க?" என்று கேட்டான்.

"சார், நான் நிவிதாவோட பழைய ஆபீஸ் மேனேஜர் ஷ்யாமோட ஃபிரண்டு. ரொம்ப முக்கியமா நான் உங்க அக்கா கிட்டே பேசணுங்க. அவங்களைப் பேசச் சொல்லுங்க.

"அவங்களும் அத்தானும் உங்க ஃப்ரெண்டு ஷ்யாம் சாரோட காரல புறப் பட்டு மெட்ராஸ் வந்துக்கிட்டிருக்காங்க சார். என்ன விஷயம்?"

"மைகாட்! புறப்பட்டுட்டாங்களா? எவ் வளவு நேரம் இருக்கும் புறப்பட்டு?"

"அரை மணி நேரமாச்சு சார்."

"அய்யோ! எப்படிச் சொல்றதுன்னு தெரியலையே... மிஸ்டர் வித்யா சாகர், உங்க அக்காவும், அத்தானும் பெரிய ஆபத் திலே இருக்காங்க. முழு விவரமும் சொல்ல இப்ப அவகாசம் இல்லை. ஷ்யாம் நல்ல நோக்கத்தோட அவங்களைக் கார்ல ஏத்திக் கிட்டுப் புறப்படலை. வினோத் குமாரைக் கொலை செய்ற அளவுக்கு வெறியோட புறப்பட்டுத் துப்பாக்கி எல்லாம் எடுத்துக் கிட்டு வந்திருக்கான். போலீசுக்கு இன்ஃபார்ம் பண்ணி அந்தக் காரைத் தடுக்கச் சொல்லுங்க, உங்க அக்காவையும், அத்தா னையும் பத்திரப்படுத்துங்க. ஏதாச்சும் செய்ங்க. அவங்களைக் காப்பாத்துங்க. நான் பஸ்லேயோ, ரயிலேயோ பிடிச்சி காலைல திருச்சி வர்றேன். உடனே செயல்படுங்க"

இங்கே தீபக் ஓரளவு நிம்மதியோடு போனை வைக்க...

மிகவும் பதற்றமுற்ற வித்யா சாகர் வேக மாகத் தன் வீட்டிற்கு ஓடி வந்தான். பேசிக் கொண்டிருந்த நண்பனின் மோட்டார் பைக் கைக் கிட்டத்தட்டப் பிடுங்கிக் கொண்டு, "டேய் சேகர், உடனே போலீசுக்கு போன் செஞ்சி அக்காவையும், அத்தானையும் ஏத்திக்கிட்டுப் போறை ஷியாமோட கார் நம்பரைச் சொல்லி அதைத் தடுத்து நிறுத்த ஏற்பாடு பண்ணச் சொல்லு. அத்தானைக் கொல்லப் போறானாம் அவன். மெட்ராஸ் லேர்ந்து போன் வந்துச்சி. விவரம் புரியலை. நான்... நான்.... வர்றேன்" என்று அவசர மாகக் கத்தி விட்டுச் சாலையில் சீறினான் உச்ச வேகத்தில்.

முன் சீட்டில் வினோத் குமார் மயக்கத் திலேயே கிடக்க... பின் சீட்டில் நிவிதா வியர்த்து, விறுவிறுத்து, பாதி மயக்கம், பாதி அழுகை, பாதி பயம், பாதி மிரட்சி என்று வெறித்த நிலையில் அப்படியே அமர்ந் திருக்க....

. பானெட்டில் இருந்து தனது ரேடியம் கடிகாரத்தில் நேரம் பார்த்துக் கொண்டு கீழே குதித்தான் ஷ்யாம்.

"நிவிதா, உனக்குக் கொடுத்த முப்பது நிமிஷம் முடிஞ்சு போச்சி." என்று துப் பாக்கியை வினோத் குமாரை நோக்கி நீட்டிக் கொண்டு, "சொல்லு. சுடட்டுமா? பின் பக்கம் வரட்டுமா?" என்றான் அழுத்தமாக.

நிவிதா மௌனமாக இருந்தாள்.

"இந்த மௌனத்தை எந்தக் காரியத்துக் குச் சம்மதமா நான் எடுத்துக்கறது? ஓக்கே. நான் பாசிட்டிவாவே எடுத்துக்கறேன்" என்று நகர்ந்து பின் கதவின் பிடியில் கை வைத்தான்.

கண்மூடித்தனமான வேகத்தில்,



"அரசியல்வாதியைத் திருமணம் செய் துக்கிட்டியே, முதலிரவின் போது முதன் முதலா உன்கிட்டே என்ன பேசினார்?"

"'கடைசி வரைக்கும் என் கட்சியி லேயே இருப்பியா டார்லிங்'ன்னு கேட் டார்!"

— மணியன் தர்மலிங்கம்.

## வாசகர்களுக்கு ஓர் அரிய சந்தர்ப்பம்

கி. பி. பன்னிரண்டாம் நூற்றாண்டில் யாழ்ப்பாணத்தை ஆண்ட சூரிய குல மன்னர் கூழங்கை சிங்கை ஆரிய சக்கரவர்த்தி அவர்கள் நல்லூரில் உள்ள ஸ்ரீ கைலாசநாத பிள்ளையார் ஆலயத்தைத் தமது ராஜதானியின் பிரதான கோயிலாகக் கட்டி வழிபட்டார்கள். கி. பி. 1620 – க்குப் பிறகு ஏற்பட்ட போர்ச்சுக்கீசியர் மற்றும் டச்சுக்காரர்களின் படையெடுப்பின் காரணமாக இருமுறை பெருமளவில் அழிக்கப்பட்டுவிட்ட இக்கோயிலை கி. பி. 1850 – இல் ஸ்ரீலஸ்ரீ ஆறுமுக நாவலர் அவர்கள் பெருமளவில் திருப்பணிகள் பல செய்து அழகிய கோயிலாக மீண்டும் நிர்மாணித்தார்கள். இவ்வாறு இலங்கையின் புராதன கோயில்களில் முதன்மையானதாக சுமார் 900 ஆண்டுகளுக்கும் மேலாக விளங்கி வரும் இத்திருக்கோயில் சமீபத்தில் 11.10.87 ஞாயிற்றுக்கிழமையன்று நடைபெற்ற இராணுவ நடவடிக்கைகளின் போது மூன்றாம் முறையாகப் பெருமளவில் சேதமடைந்தது. இதைத் தொடர்ந்து ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ சங்கராச்சார்ய சுவாமிகளின் அனுக்கிரஹத்துடனும், பொது மக்களின் ஒத்துழைப்புடனும் திருப்பணிகள் துவக்கப்பட்டு நடைபெற்று வருகின்றன. கூடிய விரைவில் நடக்க இருக்கும் கும்பாபிஷேகத்திற்காக இந்தியாவின் பல்வேறு தலங்களிலிருந்து புனித மண்ணும், புனித தீர்த்தங்களும் சேகரிக்கப்படுகின்றன. இக்கைங்கர்யத்தில் இந்து மடாலயங்களும், ஆசிரமங்களும் மற்றும் பொது மக்களும் இமயம் முதல் குமரி வரை இந்தியாவின் பல்வேறு தலங்களின் புனித மண்ணையும், புனித கிணறுகள், குளங்கள் மற்றும் நதிகளின் தீர்த்தங்களையும் சிறிதளவு எடுத்து அதுபற்றிய சிறு குறிப்புடன் நேரிலோ அல்லது வி. பி. பி. மூலமோ கீழ்க்கண்ட திருச்சிராப்பள்ளி முகவரிக்கு அனுப்பி வைக்குமாறு பணிவன்புடன் கேட்டுக் கொள்ளப்படுகின்றார்கள். இவ்வாறு நேரிலோ, வி. பி. பி. மூலமோ வருகின்ற புனித மண்ணும் தீர்த்தங்களும் ஏற்றுக் கொள்ளப்பட்டு, கும்பாபிஷேகத்திற்கு முன்பாகக் கோயிலுக்கு அனுப்பி வைக்க ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன. கும்பாபிஷேகம் பூர்த்தியானதும் அன்பர்களுக்குப் பிரசாதங்கள் தபால் மூலம் அனுப்பி வைக்கப்படும்.

இங்ஙனம்,

S. A. S. கிருஷ்ணசுவாமி,
102, N. M. S. ஸ்டோர்ஸ்,
பாலக்கரை, திருச்சி – 620 008.



சென்னை ஓரியண்ட் எக்ஸ்பிரஸ் டிராவெல் கம்பெனியில் மானேஜராகப் பணியாற்றும் ஸ்ரீ M. S. ஸேதுரத்னத்தின் குமாரன் சிரஞ்சீவி ராஜகோபாலன், B. Tech., M. B. A. (Ogilvy Benson and Mather, Madras) அவர்களுக்கும், சென்னை இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆப் டெக்னலஜியில் பேராசிரியராகப் பணியாற்றும் ஸ்ரீ R. சுப்பிரமணியத்தின் குமாரத்தி சௌபாக்யவதி லதா, M. Sc., அவர்களுக்கும் 19.6.88 அன்று சென்னை முக்தா கல்யாண மண்டபத்தில் விவாஹம் சிறப்பாக நடைபெற்றது. விவாஹத்திற்குப் பல முக்கிய பிரமுகர்கள் வந்திருந்து மணமக்களை ஆசீர்வதித்தனர். வாழ்க மணமக்கள்.

ஸ்பீடா மீட்டர் தொண்ணூறைத் தாண்டித் தாண்டித் தவ்வ பைக்கை விரட்டிக் கொண்டிருந்தான் வித்யா சாகர். எதிரே வந்த ஒவ்வொரு வாகனத்தின் டிரைவரும் பயந்து போய் பிரேக் போட்டு நிறுத்தி அவனைத் திட்டி விட்டுத்தான் தொடர்ந்தார்கள்.

மிக அபாயகரமாக ஓட்டிக் கொண்டிருக்கிறோம் என்று தெரிந்தாலும், ஷியாமின் காரைப் பிடித்து விட வேண்டும் என்கிற வெறி பிரதானமாக அவனை இயக்கியது. ஆக்ஸிலேட்டரை அதன் கடைசி வரைக்கும் திருக வைத்தது.

நிவிதா இந்த கடைசிச் சந்தர்ப்பத்தை முயற்சி செய்து பார்க்கத் தீர்மானித்திருந்தாள். தான் இணங்கி விட்டதாக மௌனமாக இருந்தால், பின் கதவைத் திறப்பான். திறக்கும் அந்த துல்லிய வினாடியில் கதவை பலம் கொண்ட மட்டும் வெளிப்புறம் திடீரென்று தள்ளினால் நிச்சயம் தடுமாறி விழ வாய்ப்பிருக்கிறது. அவனை விட்டு அந்தத் துப்பாக்கிச் சைத்தான் நழுவி விழ வாய்ப்பிருக்கிறது. பாதி இருட்டில் அதை அவன் தேடும் முன்பு கத்திக் கொண்டே, என் காலடியில் இருக்கும் இந்த கார் ஜாக்கியால் அவனைத் தற்காப்புக்காகத் தாக்கி விடலாம்.

இந்த திட்டத்துடன் அவன் தந்திருந்த முப்பது நிமிடங்களில் தன் காலில் தடவிப் பார்த்து உணர்ந்த கார் ஜாக்கியை மெல்ல எடுத்து சீட் மேல் வைத்திருந்தாள். புடவையின் தலைப்பால் அதை மூடியிருந்தாள். இப்போது ஷியாம் கதவைத் திறக்கக் காத்திருந்தாள்.

ஷியாம் ஒரு கையில் துப்பாக்கியுடன், மறு கையில் கதவின் கைப்பிடியின் அழுத்தும் பகுதியை அழுத்தித் திறக்க முயன்ற போது —

திட்டமிட்டபடி கதவைப் படீரென்று அவன் மேல் திறந்தாள். இரண்டு கைகளாலும் பலம் கொண்ட மட்டும் தள்ளி,

நிச்சயமாக அதை எதிர் பார்க்காமல் ஷியாம் தடுமாறி விழுந்த போது தான் —

பைக்கில் வந்த வித்யா சாகர் இளைச் சாலையில் நிற்கும் காரைக் கவனிக்காமல் அந்த இடத்தைக் கடக்க இருந்த போது —

''காப்பாத்துங்க! காப்பாத்துங்க'' என்று அலறிக் கொண்டே நிவிதா கார் ஜாக்கியை எடுத்துக் கொண்டு கீழே இறங்கி, தடுமாறி விழுந்த ஷியாமின் இடுப்பில் முதல் அடியை இறக்கினாள்.

தன் அக்காவின் குரலைக் கேட்டு, பைக்கின் டயரைத் தேய்த்துக் கொண்டு திருப்பி — காரை நோக்கி வந்தான் வித்யா சாகர்.

''யூ.... பிட்ச்!'' என்று இடுப்பைப் பிடித்து முனகின ஷியாம் அவசரமாகத் தன் துப்பாக்கியைத் தேடி எடுத்துக் கொண்டு, ''உனக்கு இவ்வளவு திமிரா? உன்னைச் சுடறேண்டி முதல்ல'' என்று அவசரத்தில் சுட்ட முதல் குண்டு காரில் பொத்தல் போட....

மீண்டும் முயல்வதற்கு முன் —

வந்த வேகம் மாறாமல் அப்படியே பைக்குடன் அவன் மேல் மோதினான் வித்யா சாகர். ''அய்யோ!'' என்று அலறிப் புரண்டான் பின் மண்டையில் அடி வாங்கின ஷியாம்.

''வித்யா, விட்டுடு. எதுவும் செஞ்சிடாதே'' என்று நிவிதா அலற, அலற... வித்யா சாகர் தனது பைக்கை விட்டு இறங்காமல் பைக்கின் முன் சக்கரத்தை அப்படியே தூக்கி, நகர முடியாமல் அலறின ஷியாமின் கழுத்தைப் பார்த்து..'நச்' என்று ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை....

மிகப் பெரிய ஓலங்களுடன், ரத்தப் பீய்ச்சல்களுடன் ஷ்யாம் அடங்கும் வரை, அமைதியாகும் வரை... வித்யா சாகர் நிறுத்த வேயில்லை.

முற்றும்

## செண்ட்டிமெண்ட்டல் டச் விரும்புபவர்களுக்கு மாத்திரம் இன்னும் சில வரிகள்......

பிரகாசமான அந்த காலையில் வழக்கில் தீர்ப்பளிக்கப்பட்டது.

உணர்ச்சிப் பூர்வமான கொலை என்கிற வகையில் ஏழு ஆண்டுகள் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்ட வித்யா சாகர் நீதிமன்றத்திலிருந்து ஜீப்பில் ஏற்றிச் செல்வதற்கு முன் வெளியில் கலங்கின கண்களுடன் நிற்கும் நிவிதாவிடமும், வினோத்குமாரிடமும் வந்தான்.

''ஏன்க்கா அழுறே? எனக்குக் கொஞ்சம் கூட வருத்தமே இல்லை. தூக்குத் தண்டனை கொடுத்திருந்தாக் கூடக் கவலைப்பட்டிருக்க மாட்டேன். நீ நல்லா இருக்கணும்க்கா. நம்ம குடும்பத்துக்காக எவ்வளவு உழைச்சிருக்கே. எவ்வளவு தியாகம் செஞ்சிருக்கே. உனக்கு நான் எதுவுமே செய்ய முடியலையேன்னு ரொம்ப வருத்திருக்கேன். சரியான சந்தர்ப்பம் கிடைச்சது. நான் வரலைன்னா நான் செஞ்ச காரியத்தை வேற வழியில்லாம நீ செஞ்சிருப்பே. வாழ்க்கையே சோகமாயிருக்கும். எல்லாத்தையும் மற. ஜாலியா இரு. ஏழு வருஷம்தானே? ஜஸ்ட் லைக் தட். ஓடிடும். ஒரு பொண்ணு பார்த்து வை. வந்து தாலி கட்றேன். வயசு இருக்குக்கா. வர்றேன்''

ஜீப்பில் அமர்ந்து கொண்டு விலங்குக் கையுடன் கொஞ்சம் கூட முகத்தில் வருத்தமில்லாமல் டாட்டா காட்டினான் வித்யா சாகர்.

(மறுபடி முற்றும்)

**ரூபாய் ஆயிரம் பரிசு யாருக்கு? விவரங்கள் அடுத்த இதழில்......**

# எளியோரின் பணத்துக்குப் பாதுகாப்பு எங்கே...?


Co. deposits insuranc
cover likely soon

By Our Special Correspondent

MADRAS, Oct. 25 — The question of extending insurance cover to deposits with corporate bodies in the private sector, including hire purchase and leasing companies, is under consider

**த**னியார் நிறுவனங்கள், பொது மக்களிடமிருந்து பெறுகின்ற டெபாசிட் தொகைக்கு, 'டெபாசிட் பாதுகாப்பு இன்சூரன்ஸ்' வசதி செய்து கொடுக்க, அரசு மறுப்பதற்குக் காரணம், அரசின் சுயநல மனப்பான்மைதான் என்று குறிப்பிட்டு ஒரு கட்டுரை, கல்கி 5.6.1988 இதழில் வெளியாகியுள்ளது. இக்கருத்து தவறான ஒன்று.

இன்று நாட்டுடைமையாக்கப்பட்ட வங்கிகளில் டெபாசிட் செய்யும் போது, மக்கள் பெறுகின்ற வட்டி குறைவாக இருந்தாலும், சேமிப்புத் தொகைக்கு எந்த இழப்பும் ஏற்படாது என்ற நம்பிக்கை மக்களிடம் இருக்கிறது. இந்த நம்பிக்கைக்குக் காரணம் நம் நாட்டு ரிசர்வ் வங்கி, வணிக வங்கிகள் மீது செயல்படுத்தும் பணவியல் கொள்கையும், அதைச் சார்ந்த கட்டுப்பாட்டு முறைகளுமே. ஆனால், பொது மக்களிடமிருந்து டெபாசிட் பெறும் தனியார் நிறுவனங்களை இப்படி ஒவ்வொரு நிலையிலும் கட்டுப்படுத்த ரிசர்வ் வங்கிக்கு அதிகாரமில்லை.

இந்த நிலையில், தனியார் நிறுவனங்கள் பெறும் டெபாசிட்டுக்கு இன்சூரன்ஸ் வசதி கொடுத்தால், சிறிதளவே பிரீமியம் கட்டிவிட்டு, நிதிநிலை உறுதியில் (**Financial Soundness**) பல்வேறு தரத்தில் உள்ள எல்லா நிறுவனங்களும் பொது மக்களிடமிருந்து டெபாசிட் பெற முந்தும். வங்கிகளில் தொழிலுக்காகக் கடன் வாங்கினால், நிறுவனங்கள் செலுத்த வேண்டிய வட்டி விகிதம், இந்த நிறுவனங்கள் பொது மக்களின் டெபாசிட்டுக்குத் தரும் வட்டியோடு ஒப்பிட்டால், நிச்சயமாக அதிகம் தான். ஆகவே, நிறுவனங்களின் பார்வையில், பொது மக்களிடமிருந்து வரும் டெபாசிட் ஒரு வரப் பிரசாதம். இந்த வரத்தை எல்லா நிறுவனங்களும் கோரும் போது, பொது மக்களும் டெபாசிட் இன்சூரன்ஸ் பாதுகாப்பு இருக்கின்றது என்ற நம்பிக்கையில், அதிக வட்டிக்காக இந்த நிறுவனங்களில் பணத்தை டெபாசிட் செய்யும்பொழுது, மக்களின் சேமிப்பு, நிறுவனங்களை நோக்கி டெபாசிட்டாகப் போகும். ஆனால், போகின்ற டெபாசிட்டுகள் மக்களுக்குத் திரும்பக் கிடைக்குமா? இது மிகப் பெரிய கேள்வி. எல்லா நிறுவனங்களும் நிதிநிலை உறுதி படைத்தனவா?

நிறுவனங்கள் செய்யும் தவறுகளுக்காக, அவை அடையும் நஷ்டத்திற்காக, பொது மக்களின் டெபாசிட்டைத் திருப்பித் தரும் விஷயத்தில் 'டெபாசிட் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன்' பொறுப்பேற்க வேண்டியிருக்கும். அதுவும், நிறுவனங்களின் முதலீட்டுக் கொள்கை மீது கட்டுப்பாடு செலுத்தும் அதிகாரம் இல்லாமலேயே, டெபாசிட் இன்சூரன்ஸ் கார்ப்பரேஷன் பணத்தைத் திருப்பித் தரும் பொறுப்பை ஏற்க வேண்டிய அவல நிலையை, அதிகாரம் இல்லாத பொறுப்பு (**Responsibility without Authority**) என்றுதான் கூற வேண்டும்.

எனவே, பொது மக்களின் பணம், அதிக வட்டி என்ற கவர்ச்சிக்கு மயங்கி, நிதிநிலையில் உறுதியில்லாத தனியார் நிறுவனங்களிடம் சென்றுவிடக் கூடாது; அதனால் பொது மக்கள் தங்கள் சேமிப்பை இழந்து, ஏமாற்றத்திற்கு ஆளாகக் கூடாது என்ற நல்ல எண்ணந்தான், தனியார் நிறுவனங்கள் பெறும் டெபாசிட்டுக்கு இன்சூரன்ஸ் பாதுகாப்புக் கொடுக்க அரசு மறுப்பதன் காரணம்.

இன்று பொது மக்களிடமிருந்து டெபாசிட் கோரும் நிறுவனங்கள், அதற்கான விளம்பரத்துடன், தணிக்கை செய்யப்பட்ட தங்கள் நிதிநிலை அறிக்கையையும் வெளியிட வேண்டும். டெபாசிட் செய்யப்படும் பணத்திற்கு, அரசோ, ரிசர்வ் வங்கியோ உத்தரவாதம் தர இயலாது என்ற வாக்கியங்களும் விளம்பரத்தில் காணப்படும். இத

## அருள்வாக்கு



கஜானாவை எப்படியாவது ரொப்பிக் கொண்டு விடுவதில் அக்கால ராஜாக்கள் குறியாகஇருக்கவேயில்லை. இதற்கு நிரூபண மாகக் காளிதாசன் சாகுந்தலத்தில் ஒரு ஸீன் எழுதியிருக்கிறான்.

கடல் வாணிபம் செய்கிற ஒருவன் கப்பல் உடைந்து முழுகிப் போய் விட்ட தாயும் அவனுக்கு ஸந்ததியில்லாததால் அவ னுடைய சொத்து பூராவும் கஜானாவைச் சேர்ந்து விடுவதாயும் துஷ்யந்தனுக்கு நிதி மந்திரி ஒரு 'நோட்' அனுப்புகிறார். உடனே துஷ்யந்தன் அத்தனை செல்வத்தையும் ஆர்ஜிதம் செய்து கொண்டு விடலா மென்று பறக்காமல், 'பெரிய வியாபாரி என்றால் பல கல்யாணங்கள் பண்ணிக் கொண்டிருப்பானே! அப்படியிருந்தால் அவ னுடைய பெண்டாட்டிகளில் எவளாவது கர்ப்பமாயிருக்கிறாளா என்று விசாரிக்க வேண்டும்' என்கிறான். அவன் நினைத்தது போலவே செத்துப் போன வியாபாரியின் ஒரு ஸம்ஸாரம் கர்ப்பவதியாயிருக்கிறா ளென்று தெரிகிறது. "அப்படியானால் சொத்து கஜானாவைச் சேராது; கர்ப்பத்தி லிருக்கிற குழந்தையைத்தான் சேரும்" என்று துஷ்யந்தன் தீர்ப்புப் பண்ணுகிறான்.

பொருளாசையில்லாத ராஜாக்களின் ஆழ்ந்த மனிதாபிமானத்தைக் காட்டுவதாக வும், தர்மத்தை மீறாமலிருக்கிற பண்பைப் பிரதிபலிப்பதாகவும் அப்போது துஷ்யந்தன் ஒரு கார்யம் பண்ணுகிறான். பதியை இழந்த வர்கள், புத்ரனில்லாதவர்கள் யாவருக்கும் ராஜாவே ஆதரவாயிருக்க வேண்டுமென்று நினைத்து ஒரு பிரகடனம் பண்ணுகிறான். அதிலே, "எந்த பந்து காலமானவருக்கும் அந்த பந்துவாக நானேயிருப்பேன்" என் கிறான். பதியை இழந்தவர்களிடம் இப்படிச் சொல்வது அஸம்பாவிதம் என்பதால் உடனேயே, "தர்மத்துக்கு மாறாக இல்லாத உறவு முறைகளில் மாத்திரமே" என்று ஒரு கண்டிஷன் சேர்க்கிறான். சாணக்யனும் இக்கால welfare state ன் லக்ஷணமாகச் சொல்லப்படும் அநாதைகளின் ரக்ஷணையை ராஜாவின் கடமையாகச் சொல்லியிருக் கிறார். ஏழைகள், கர்ப்பிணிகள், அநாதைகள், வயஸானவர்கள், வியாதியஸ் தர்கள் ஆகியவர்களை ராஜாங்கம் ரக்ஷித் தாக வேண்டுமென்கிறார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

னால், பொதுமக்கள் நன்கு யோசித்த பிறகே இந்த விஷயத்தில் முடிவுக்கு வரு வார்கள். நிதிநிலையில் மோசமான நிறு வனங்கள், பொதுமக்களிடமிருந்து கலபத் தில் டெபாசிட் பணம் பெற்றுவிட முடியாது.

மேலும் ஒரு விஷயம். நிறுவனங்களில் இருக்கும் மக்களின் டெபாசிட் பணம் சுமார் நாலாயிரம் கோடி. ஆனால், வணிக வங்கி களில் உள்ள மொத்த டெபாசிட் தொகை ரூபாய் ஒரு லட்சத்து மூவாயிரத்து எண் ணூறு கோடி. இதில் எண்பது சதவிகிதத் திற்கும் மேலான தொகை, நாட்டுடைமை யாக்கப்பட்ட வங்கிகளிடம் உள்ளது. ஆகவே, வங்கிகளுக்கு டெபாசிட் கிடைக் காமல் போய்விடும் என்ற பயத்தில்தான் அரசு, நிறுவனங்கள் பெறும் டெபாசிட் டுக்கு இன்சூரன்ஸ் பாதுகாப்புத் தர மறுக் கிறது என்ற கூற்று ஒரு கற்பனையே.

**காரைக்கால், டாக்டர் டி. தருமலிங்கம்.**

**(பொருளியல் விரிவுரையாளர், அறிஞர் அண்ணா அரசு கலைக் கல்லூரி)**

ஜூன் மூன்றாம் தேதி நிலவரப்படி வங்கிகளிடம் ஒரு லட்சத்து இருபதாயிரத்து எண்ணூற்று முப்பது கோடி ரூபாய் டெபா ஸிட்டுகளாக உள்ளது. என்றாலும் பல் வேறு சட்ட திட்டங்களின்படி இதில் ஐம்பத் தெட்டு சதவிகிதத்தை அரசாங்கம்தான் பயன்படுத்திக் கொள்கிறது. எனவே வங்கி டெபாஸிட்கள் குறைந்து போனால் அரசுக்கு வங்கிகளின் நிதியைப் பயன்படுத் திக் கொள்ளும் வாய்ப்பும் அந்த அளவுக்குக் குறைந்து போகும் என்பது தெளிவு.

வங்கிகளில் தனி நபர் மட்டும் பணம் டெபாசிட் செய்வதில்லை. பல்வேறு நிறு வனங்கள் தவிர, அரசு இலாக்காக்களும் அரசுத் துறை நிறுவனங்களும் டெபாஸிட் செய்கின்றன. தவிர, தனியார் நிறுவனங்கள் தாங்கள் மக்களிடம் பெறும் டெபாஸிட் களில் பத்து சதவிகிதத்தை வங்கிகளில் டெபாஸிட்டில் வைத்திருக்க வேண்டும் என்ற விதிமுறையும் உள்ளது. ஆனால் தனியார் நிறுவனங்களில் டெபாஸிட் செய் பவர்கள் பெரும்பாலும் தனி நபர்களே. தங்கள் வாழ் நாளின் சேமிப்பையும் பென்ஷன் பணத்தையும் டெபாஸிட் செய் கிறார்கள். கிடைக்கும் வட்டியில் காலத்தை ஓட்ட எண்ணுகிறார்கள். இந்த எளியோரின் நலனைக் காக்க டெபாஸிட் இன்ஷூரன்ஸ் உதவும் என்று எடுத்துக் காட்டுவதே கட்டுரையின் நோக்கம். மேல் நாடுகள் பலவற்றில் இத் திட்டம் வெற்றிகரமாக அமுலாக்கப்படுகிறது.

இந்த விஷயத்தை அரசும் இப்போது புரிந்து கொண்டு சிந்திக்கத் தொடங்கியிருக் கிறது. ஏழாவது திட்டத்தின் முடிவில் கம்பெனி டெபாஸிட் இன்ஷூரன்ஸ் ஆரம்பமாகலாம் என்று தெரிய வருகிறது.

— வி. கோபாலன்..



பூஜ்யாய ராகவேந்த்ராய ஸத்யதர்ம ரதாயச:
பஜதாம் கல்பவிருக்ஷாய நமதாம் காமதேனவே !

## ஒரு வேண்டுகோள்

புண்ணிய பூமியாகிய இப்பாரத நாட்டில் அவதரித்த பேரருளாளர்களில் மஹா புருஷர்களில் தலைசிறந்தவர் **ஸ்ரீ ஸ்ரீ ராகவேந்திர சுவாமிகள்** ஆவர்.

துங்கபத்ரா நதிக்கரையில் அமைந்துள்ள இம்மகானுடைய பிருந்தாவனம் போல ஜென்ம பூமியாகிய சிதம்பரத்திற்கு அடுத்த புவனகிரியில் வெள்ளாற்றங்கரையில் அமைந்துள்ள நினைவாலயத்தை

சினிமா புகழ் **சூப்பர் ஸ்டார் ரஜினிகாந்த்** அவர்களால் 29-8-88 அன்று திறந்து வைக்கப்படுகிறது. பக்தர்கள் தாராளமாக நிதியுதவி அளித்து, இம்மகானின் அருளைப் பெற வேண்டுகிறோம். இந்நிதியுதவிக்கு வருமான வரியிலிருந்து விலக்கு அளிக்கப்பட்டுள்ளது.



நிதியுதவி அனுப்ப வேண்டிய முகவரி :

செயலாளர்,
தவத்திரு ஸ்ரீஸ்ரீ ராகவேந்திர
சுவாமிகள் நினைவாலய குழு,
37, ஆனிக்காரன் தெரு,
சிதம்பரம் 608 001.



* கோபால்



* அமிழ் போன்ற விழித்திரை

# விதியை மாற்றும் விழி தானம்

கிணத்துக்கடவு அருகே உள்ள, கொண்டம்பட்டியிலுள்ள ஹன்சாவுக்கு, கடலை ஆயில் மில்லில் 'கடலைக்காய் வழிச்சுக் கொட்டுகிற' வேலை. ஒரு நாள் இடது கண் அரித்தது; தூசி பட்டது மாதிரி இருந்தது என்று தேய்த்து விட்டுக் கொண்டார். கண் துருத்திக் கொண்டு வந்தது. கோவையிலேயே தனியார் மருத்துவமனை ஒன்றில் சிகிச்சை பெற்ற பிறகு வலது கண் சற்றுத் தெரிந்தது. பிறகு பார்வை கொஞ்சம் கொஞ்சமாக மறைந்து வந்தது. ஹன்சா ஓர் அநாதை. சங்கரா கண் மருத்துவமனைக்கு வந்தார். இடது கண்ணுக்கு ஒரு செயற்கைக் கண் பொருத்தி விட்டு, வலது கண்ணுக்குப் பதிலாகப் புதிய கண் ஒன்று பொருத்திய பிறகு, அவரே தம் வேலைகளைச் செய்து கொள்ள முடிகிறது. இப்போது சிரநாய்க்கன்பாளையத்தில் கடலை

ஆயில் மில்லில் வேலை பார்க்கிறார்.

மஜுமிச்சம்பட்டி கோபாலுக்கு, விளையாடும் போது குச்சி கண்ணில் குத்தி விட்டது. அப்புறம் க்ளகோமா நோய் வந்து, பார்வை நாளுக்கு நாள் குறைந்து கொண்டு வந்தது. வீட்டில் சொன்ன போது வைத்தியம் பார்க்க வசதி இல்லை என்றார்கள். பெரிய ஆஸ்பத்திரியில் டாக்டர் பார்த்து விட்டு (காமாட்சியம்மன்) கோயில் ஆஸ்பத்திரியில் போய்ப் பார்க்கச் சொன்னார். இரண்டு வருடங்களுக்கு முன்னால் நடந்தது அது. மாற்றுக் கண் வைக்கலாம் என்றார்கள். பணம் செலவாகுமோ என்று பயந்து போய் வராமலே இருந்து விட்டாராம் கோபால். நாலு தடவை ஆள் அனுப்பி இங்கே கூட்டிக் கொண்டு வந்தார்களாம். இரண்டு மாதம் ஆகிறது ஆபரேஷன் பண்ணி. பார்வை கிடைத்து விட்டது.



கண் வலியால் பாதிக்கப்பட்டு, சீழ் பிடித்து, விழிகள் திறக்க முடியாமல் அவதியுற்று, படிப்படியாகப் பார்வை இழந்து வந்த இவர்களைப் போன்ற எண்ணற்றவர்களுக்கு சங்கரா கண் மருத்துவ மனை இலவசமாகச் சிகிச்சை அளித்து அவர்களின் தலைவிதியையே மாற்றி எழுதி வருகிறது. காரணம், மிக அதிகமாகக் கண் தானம் செய்பவர்கள் இன்று கோவை நகரத்தில்தான் இருக்கிறார்கள்! இங்கே உள்ள குஜராத்தி, ஜெயின் சமூகத்தினர் இதில் முன்னணியில் இருக்கிறார்கள். ஆர்ய வைசியர்கள், கவுண்டர்கள், நாயுடு, பிராமணர் என்று பலரும் கண்தானம் செய்கிறார்கள். சென்ற இரண்டு வருடங்களில் மட்டும் 126 கண்கள் தானமாகக் கிடைக்கப் பெற்று, பார்வை இல்லாதவர்களுக்குப் பொருத்தப்பட்டிருக்கின்றன. இங்கிருந்து கொச்சி, மதுரை, சென்னை முதலிய நகரங்களில் உள்ள கண் வங்கிகளுக்கும் கூட தானமாகக் கிடைத்த கண்கள் அனுப்பப் பட்டிருக்கின்றன!

பதினோரு வருடங்களுக்கு முன், சேவை மனப்பான்மை கொண்ட இளம் டாக்டர்களால் சிறிதாகத் துவங்கப்பட்ட சங்கரா மருத்துவ மையத்தில், கண் மருத்துவ மனையும், கண் வங்கியும் மிகச் சிறப்பாகச் செயல்படுகின்றன என்றால் அதற்குக் காரணம் டாக்டர் எஸ். வி. பாலசுப்பிரமணியம் என்ற உற்சாகம் மிகுந்த இளம் கண் மருத்துவர்தான். "அவருடைய தூண்டுகோல்தான் கண் வங்கி உருவாகக் காரணம்!" என்றார் மருத்துவ மையத்தின் ஒருங்கிணைப்பாளர் டாக்டர் ஆர். வி. ரமணி. மருத்துவ மையம், ஆரம்பித்த புதிதில் திருவேங்கடசாமி சாலையில் உள்ள

• உருவாகி வரும் சு ராஜ் மருத்துவமனை.



காமாட்சி அம்மன் ஆலயத்தின் முன்புறம் தான் இயங்கி வந்தது. அதனால்தான் பலரும் 'கோயில் ஆஸ்பத்திரி' என்றே அதைக் குறிப்பிட்டார்கள்....

சங்கரா கண் மருத்துவ மனையில், சமீபத்தில் கண் தானம் பெற்ற ஒரு பெண் மணி பாலக்காட்டைச் சேர்ந்த முஸ்லிம். மதங்கள் மனித குலத்தை இணைக்கக் கண் களும் ஒரு பாலம்!

• கண் தானம் கொடுப்பவர்களுக்கு வயது தடையில்லை. ஆண், பெண் யார் வேண்டுமானாலும் கொடுக்கலாம். கண் நோயால் அவதிப்பட்டுப் பிறகு குணப் படுத்தப்பட்டவரின் கண்ணையும் பயன் படுத்த முடியும். கண்ணாடி அணிந்தவர் கள், காடராக்ட் புரை உள்ளவர்கள் போன்ற எல்லாரும் கண் தானம் செய்ய லாம். மஞ்சள் காமாலை வந்து இறந்த வரோ, விழிகளில் கான்சர் நோய் தாக்கிய வர்களோ மட்டும் கொடுக்கக் கூடாது.

• கண் தானம் கொடுக்க எந்த மதத்தின் கோட்பாடுகளும் தடைவிதிக்கவில்லை. (சிவபெருமானுக்கே முதல் கண்தானம் செய்தவர் கண்ணப்பநாயனார்!)

• கண் தானம் செய்பவர்களின் நெருங் கிய உறவினர், அவரது இறுதிக் காலத்தில் டாக்டருக்குத் தெரிவிக்க வேண்டும். பத்தா யிரம் கண் தானப் பத்திரங்கள் கொடுத் திருக்கிறோம், இருபதாயிரம் கண்கள் தானம் செய்யப்பட்டுள்ளன என்பதெல் லாம் படிக்கும் போது பிரமிப்பூட்டலாம். ஆனால் உண்மையில் கண் தானம் நிகழ் வது, ஒருவர் காலமான பின்தானே? அத னால் கூடிய வரையில் உங்களது உற விலோ, உங்களுக்கு நன்கு தெரிந்த, உங்கள் சுற்றுப் புறத்தில் வாழ்கின்ற, வயதில் முதிர்ந்த பெரியவர்களிடமோ, கண் தானத் தின் மேன்மையை எடுத்துக் கூறி, அவர்கள் கண் தானம் செய்யப் பூரண சம்மதம் அளிக்கும்படி வேண்டுங்கள்.

• தானம் கொடுப்பவரின் ஆயுள் முடிந்து ஆறு மணி நேரத்துக்குள் கண்கள் அகற்றப் பட வேண்டும். அதனால் டாக்டருக்கு உடனே தெரியப்படுத்துவது அவசியம். இதில் உறவினரின் பூரண சம்மதம் தேவை. ஆறு மணி நேரத்துக்குப் பிறகு விழிப்பட லத்துக்குப் பின்னால் இருக்கும் என்டோ தீலியல் செல்கள் சிதைந்து சிதறிப் போய், பலனளிக்காது போய்விடும்.

• கண்களை எடுக்க எந்த விதமான தனி அறையோ, தனி இடமோ தேவை இல்லை.

• கண்கள் தூசியற்றதாகவும், தூய்மை யாகவும் இருக்க, கண்களை மூடி ஈரப் பஞ்சு வைத்துக் கட்டிவிட வேண்டும். அப்போதுதான் விழிப்படலம் (கார்னியா) ஈரமாகவும் சுத்தமாகவும் இருக்கும்.

• கண்களை எடுக்கப் பத்து நிமிடமே போதுமானது. கண்களை அகற்றுவதால் முகத்தில் எந்த விதக் குறையோ மாற்றமோ இருக்காது. செயற்கைக் கண்கள் அப்போதே பொருத்தப்பட்டுவிடும்.

• கண்தானம் செய்த குடும்பத்துக்கு நன்றி தெரிவித்து நற்சான்றிதழ் வழங்குகிறார்கள், சங்கரா கண் வங்கியினர்.

இதுவரை நூற்றைம்பதுக்கும் மேற்பட்ட தூண்டுதல் கூட்டங்கள் எனப்படும் 'மோடிவேஷன் கேம்ப்' நடத்தியிருக்கிறார் டாக்டர் ஆர். வி. ரமணி. நடிகர் கமலஹாசனிடம் கண் தானம் பற்றிய ஸ்லைடுகளைப் போட்டுக் காண்பித்த போது, கமல் தன் ரசிகர் மன்றத்தினரைக் கண் தானம் செய்ய ஊக்குவிப்பதாகவும், பாரங்களைப் பூர்த்தி செய்து தருவதாகவும் உடனே வாக்களித்தாராம். துண்டுப் படம் ஒன்றும் தயாரித்துக் கொடுப்பதாகச் சொல்லியிருக்கிறார் கமல்.

கோவை டெலிபோன் டைரக்டரியில் அத்தியாவசிய எண்கள் பகுதியில், சங்கரா கண் மருத்துவ மனை எண் கொடுக்கப்பட்டிருக்கிறது. சட்டென்று கவனத்தை ஈர்க்க ஒரு கண் படமும் போட்டிருக்கிறது! தொலைபேசி கிடைப்பதில் ஏதேனும் நடங்கல் இருந்தால் டெலிபோன் இலாகாவில் தெரிவித்தால் உடனே அவர்கள் சங்கரா கண் மருத்துவ மனைக்குச் செய்தியை அனுப்பி விடுகிறார்களாம். இதற்காகவே கோயமுத்தூர் தொலைபேசிக்கு ஒரு தனி சபாஷ் போடலாம்!

'ஐ டோனர்ஸ் கிளப்' என்று ஈரோடு, கோபிசெட்டிப்பாளையம், பொள்ளாச்சி, கூனூர் ஆகிய இடங்களில் செயல்பட்டு வருகிறது. இவை சங்கரா கண் மருத்துவ மனையோடு தொடர்பு உடையவை.

அகற்றப்பட்ட கண்ணைப் பத்திரமாகப் பாதுகாக்க, ஒரு தனிக் குப்பியில் போட்டு, தெர்மாஸ் பிளாஸ்க்குக்குள் வைத்து, குளிர் சாதனப் பெட்டியில் வைத்து விடுகிறார்கள். இது நாற்பத்தெட்டு மணி நேரத்துக்குள் பார்வையற்றவருக்குப் பொருத்தப்பட வேண்டும். ஆனால் சங்கரா கண் மருத்துவ மனையைப் பொறுத்த வரை 20 மணி நேரத்துக்குள்ளேயே பொருத்தப்பட்டு



எஸ். வி. பால சுப்பிரமணியம்.



நடராஜ்.

விடுகிறது. எம். கே. மீடியா என்ற, வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட குப்பியில் வைத்தால் 5 நாள் முதல் 7 நாள் வரையில் பாதுகாக்கலாம்.

உலகிலுள்ள மொத்த பார்வையற்றோரில் ஐந்தில் ஒரு பகுதி — அதாவது சுமார் ஒரு கோடிப் பேர் இந்தியர்கள். இதில் பத்தில் ஒரு பகுதியினரின் கண் கோளாறுகளைச் சரி செய்து விட முடியும்; தடுத்து விட முடியும் என்று உணர்ந்ததாலேயே தொடங்கப்பட்டதுதான் சங்கரா கண் மருத்துவமனை.

பெற்றோர் அல்லது, உறவினர் காலமாகி விட்டால், புரோகிதரை அழைக்கு முன், சங்கரா கண் மருத்துவமனையிலுள்ள டாக்டர்களில் யாராவது ஒருவரைக் கையோடு அழைத்துப் போக காரில் வந்து விடுகிறார்கள் என்று அறிந்த போது வியப்பாக இருந்தது. ஒரு பள்ளி ஆசிரியர் இறந்து போய் ஐந்தரை மணி நேரமாகி விட்டதாம், கண்ணை எடுத்துக் கொள்ளச் சொல்லிச் செய்தி கிடைத்த போது இனி பயன் இருக்காதே என்று எடுத்துச் சொல்லியும் அவர்கள் விடவில்லையாம். ஆராய்ச்சிப் பணிக்காவது உபயோகித்துக் கொள்ளுங்கள் என்றார்களாம். ஆனால் அதிர்ஷ்டவசமாக, விரைந்து செயல்பட்டதில் கண்கள் இரண்டும் நன்றாக இருக்கவே, திருச்சூரில் ஒன்று, பச்சப்பாளையத்தில் ஒன்று என்று இரண்டு பேருக்குப் பார்வை கிடைத்தது.

சங்கரா கண் மருத்துவ மனையை இந்தியாவிலேயே 'மாடல் மருத்துவ மனை' யாக மத்திய அரசு அங்கீகரித்து, மாருதி வேன் ஒன்று அளித்திருக்கிறது! வெளி நாட்டிலிருந்து தருவிக்கப்படும் இயந்திரங்களுக்கும் உபகரணங்களுக்கும் கஸ்டம்ஸ் ட்யூட்டியிலிருந்து விசேஷ விலக்கு அளித்திருக்கிறது.

மரணப்படுக்கையில் இருந்த ஒரு பெண்மணி, தமது அரை மயக்க நிலையிலும் கூட, ''கண்கள்.... கண்கள்.....'' என்று தமது

மருத்துவக் குழுவில் சிலருடன் சேவை ஊழியர்கள்.






'கார்னியல் டிரான்ஸ்பிளான்ட்' என்றால் கண்ணை அப்படியே முழுக்க எடுத்து விட்டு வேறொரு கண்ணை வைப்பது அல்ல.

கண்ணின் விழிப்படலத்தில் (Cornea) காயம் அல்லது தழும்பு ஏற்பட்டு அதனால் வெள்ளை வடிவத்தில் பழுது வந்தால், உள்ளே இருக்கும் 'லென்ஸ்' பகுதிக்கு வெளிச்சம் செல்ல முடியாது. அப்போதுதான் கண், பார்வையை இழக்கிறது.

'கார்னியா' அல்லது விழிப்படலத்துக்கு எந்த ஊறு விளைந்தாலும், அது தழும்பு அல்லது காயத்தில்தான் முடியும். அந்த 'கார்னியா'வை மட்டும் அகற்றி விட்டு, தானம் பெறப்பட்ட 'கார்னியா'வை வைத்துத் தைத்து விடுகிறார்கள். இதற்குத்தான் 'கார்னியல் டிரான்ஸ்பிளான்ட்' என்று பெயர். இதை 'கெரடோ—பிளாஸ்ட்டி' என்றும் சொல்லுவார்கள்.

மகனிடம் நினைவுபடுத்திக் கொண்டே இருந்ததும், ஜயேந்திர சுவாமிகள் புதிய மருத்துவமனை தொடக்க விழாவுக்கு வந்து, டாக்டர்களைப் பாராட்டிக் கொண்டிருக்கும் போதே, கண் மருத்துவர் பாலசுப்பிரமணியனுக்கு ஒரு சிறிய சீட்டு வந்து அதைப் பிரித்துப் பார்த்த போது 'இரண்டு கண்கள் அகற்றப்படத் தயாராக இருக்கின்றன — உடனே வாருங்கள்' என்று செய்தி வந்ததும் உண்மை நிகழ்ச்சிகள்.

இது நாள் வரையில் மாற்றுக் கண் அறுவைச் சிகிச்சையை ஆர். எஸ். புரத்திலுள்ள டாக்டர் ராவ் மருத்துவமனையில் செய்து வந்தார்கள். இனி, புதிதாக நிர்மாணிக்கப்பட்டு வரும் காஞ்சி காமகோடி மெடிகல் டிரஸ்ட்டின், நடராஜ் மருத்துவ மனையில் செய்வார்கள். கோவை நகர எல்லையை ஒட்டி, சத்தியமங்கலம் சாலையில், சரவணம்பட்டி கிராமத்தில், உருவாகி வருகிறது இந்த பிரம்மாண்ட மருத்துவ மனை. இது முழுவதும் நன்கொடைகளாலேயே உருவாகியுள்ளது. நோயாளிகள் தங்கி சிகிச்சை பெறும் அறைகள், பரிசோதனைக் கூடம், புற நோயாளிகள் பிரிவு, ஆபரேஷன் தியேட்டர், அதற்கான உபகரணங்கள், நடமாடும் கண் மருத்துவ மனை, சங்கரா செய்தி இதழ் என்று தனித் தனியே செலவுகளை நிர்ணயித்து ஒவ்வொரு செலவையும் ஒரு தனி நபரோ நிறுவனத்தினரோ தங்கள் வசதிக்கேற்ப ஏற்றுக் கொண்டு விடுகின்றனர்.

மில் அதிபர் நடராஜ் குடும்பத்தினர் இந்தரை ஏக்கர் நிலத்தை அப்படியே நன்கொடையாகக் கொடுத்ததால்தான் இப்படி ஒரு மருத்துவமனை சாத்தியமாயிற்று. கண் மருத்துவம் மட்டுமல்ல, எல்லா நோய்களுக்கும் சிகிச்சை அளிக்கும் முழுமையான பணியை சிரத்தையோடு செய்கிறார்கள். கிட்டத்தட்ட ஆயிரம் புற நோயாளிகள் தினசரி காஞ்சி காமகோடி மருத்துவ மனையிலும் ஐயப்பா மெடிகல் சென்டரிலும் சிகிச்சை பெறுகிறார்கள். ஆரம்ப சுகாதார நிலையமாகத் துவங்கி இன்று ஆலமரம் போல் வளர்ந்து விட்ட இந்த மருத்துவ மையத்தில், 75 இளம் டாக்டர்கள், இருபத்தைந்து சேவைப் பணியாளர்கள், முப்பது 'சங்கரா இளைஞர் குழு'வினர் அலுக்காமல் சலிக்காமல் பணியாற்றுகிறார்கள். இடையிடையே அருகிலுள்ள கிராமங்களில் காலை ஏழு மணிக்குள் போய்ச் சேர்ந்து, மாலை வரை சுகாதார முகாம்கள் நடத்துவதையும் விட்டுவிடவில்லை! தீவிர உழைப்பாளிகளான டாக்டர்கள் தங்கள் சொந்த நிறுவனம் போலவே இந்த மருத்துவ மையத்துக்குப் பணியாற்றுவது குறிப்பிடத்தக்கது. முணுமுணுக்காத சேவை ஊழியர்கள் பிரபல அதிகாரிகள் முதல் சாதாரண தொழிலாளர் வரை இருக்கிறார்கள்!

"சுதந்திரப் போராட்ட வீரர்கள் அத்தனை பேருக்கும் இலவச மருத்துவச் சலுகை அளித்திருக்கிறோம்" என்று இத்தனைக்கும் மேலே புதிதாக ஒரு சேவையைத் துவங்கியிருப்பதாக டாக்டர் ரமணி குறிப்பிட்டார். 'இது எங்களுக்குத் தோன்றாமல் போயிற்றே!' என்று மத்திய அரசு மக்கள் நலத்துறையினர் சொன்னார்களாம். இதை எல்லா மாநிலங்களிலும் விஸ்தரிப்பது பற்றி அரசு யோசித்து வருகிறதாம்.

வேறு பல துறைகளில் போல மருத்துவத் துறையிலும் வழிகாட்டுகிறது கோவை நகரம்!

— சாருகேசி

அட்டை வண்ணப்படமும் (மைக்ரோ சர்ஜரி) பிற படங்களும்:
கே. வி. ஆனந்த்.

## 13

தர்மராஜன் ஏஸிடி கராஜில் விசாரிக்க மறுபடி சென்றபோது நிஸ்ஸார், முதலாளி மங்களூர் போயிருப்பதாகச் சொன்னான்.

''நிஸ்ஸார் இந்த லிஸ்ட்டில இருக்கறவங்க எல்லாரும் வண்டி எடுக்க வந்தாங்களா?''

நிஸ்ஸார் அவர் கொடுத்த பட்டியலைப் பார்த்து ''வந்தாங்களே! எல்லார்கிட்டயும் சொல்லியிருக்கேன், போலிஸ் ஸ்டேஷனாண்டை வந்து ரிப்போர்ட் கொடுக்கும்படியா... இந்த பாபு பய ஒருத்தன் தான் இன்னமும் வண்டி எடுக்க வரலை. உடம்பு கிடம்பு சரியில்லையோ என்னவோ?''

''தமிழ் பேசற பையனா?''

''தமிழு கன்னடம் இரண்டும் பேசுவான்.''

''சின்னப் பையன்?''

''ஆமாம்.''

''எங்க இருக்கான், விலாசம் சொல்ல முடியுமா?''

''ரிஜிஸ்தரைப் பார்த்துத்தான் சொல்லணும்.''

''பார்த்துச் சொல்லுங்க.''

''அவனைச் சந்தேகப்படறிங்களா? ரொம்பச் சாது ஸார். உடம்பு கிடம்பு சரியில்லாமதான் இருக்கணும். அதான் வண்டி எடுக்க வரலை.''

''சரி. அவன் வந்தாச் சொல்லுங்க. அப்பறம் அவன் விலாசம்....''

''பாத்து எடுத்து வெக்கறேன் ஸார்.''

தர்மராஜன் சோமசேகரிடம் சென்றபோது, ''இவன் ஒருத்தன்தான் ஸார் சம்பவம் நிகழ்ந்த பிற்பாடு வண்டி எடுக்க வரலை'' என்றார்.

''அநதம்மா போன் பண்ணாங்க, போய்ப் பார்த்துட்டு வந்துருங்களேன்!''

''அம்ருதாவா?''

''ஆமாம். ஏதோ மோதிரம் 'மிஸ்ஸிங்'காம். நேராப் போய் விசாரிச்சுட்டு வந்துருங்க.''

''ப்ரொபஸர் ரொம்ப முறைச்சுக்கறார் ஸார்.''

''பரவால்லை, போய் விசாரிச்சுட்டு வாங்க. நான் விதான் சௌதா போயிட்டு, அப்பால போன் பண்றேன்.''

சோமசேகர் ஒரு மணி நேரத்துக்குப் பின், போன் பண்ணிய போது, தர்மராஜன் வந்து போய் விட்டதாக டாக்டர் ராம்பிரகாஷ் சொல்ல, அப்போதுதான் 'பாபு' என்ற பெயர் பற்றி கேட்டார்.

அதற்கு ராம்பிரகாஷ் சரியாகப் பதில் சொல்லா விட்டாலும் அம்ருதா தூங்கி எழுந்ததும் சொன்னார், ''சோமசேகர் போன் பண்ணியிருந்தார் அம்ரு...''

''கண்டுபிடிச்சாச்சாமா?'' என்றாள், ஆர்வத்துடன்.

''இல்லை. 'பாபு'ன்னு ஒரு பேர் சொன்னார். அந்தப் பேர் ஏதாவது காதில விழுந்ததான்னு உங்கிட்ட கேட்கச் சொன்னார்.''

''எப்ப?''

''சம்பவம் நடந்த அன்னைக்கு.''

''சம்பவம்!.... என்ன சுலபமாச் சொல்லியாச்சு. சம்பவமா அது? நைட்மேர் இப்பக் கூட தூக்கித் தூக்கி போடுது. எப்படி நீங்க அதைச் சம்பவம்னு அத்தனை ஈஸியா வர்ணிக்கிறீங்க? உங்களுக்கு அது ஒரு சம்பவமா இருக்கலாம். எனக்கு அது வாழ்க்கையை முழுக்க முழுக்கத் திசை திருப்பிட்டது.''

''அப்படியெல்லாம் பேசாத அம்ரு.

# இருள் வரும் நேரம்

அந்தச் சம்.... விபத்தினால உன்மேல எனக்கு இருக்கிற அன்போ, ஆதரவோ ஒரு இம்மி கூட குறையலை. என்னைப் பொறுத்த வரையில நீ அதே அம்ருதாதான். அன்னைக்கு ரிஸப்ஷனுக்குக் இளம்பறப்ப எப்படி களங்கமற்ற பரிபூரண மனைவியா இருந்தியோ, அதேதான் இப்பவும்.''

''நீங்க எனக்குச் சமாதானத்துக்காகச் சொல்றீங்க. எந்த ஆண் பிள்ளையும் தன் பெண்டாட்டி இப்படி ஆனப்புறம் அவளை முன்ன மாதிரி ட்ரீட் பண்ணவே முடியாது.''

''யார் சொன்னது உனக்கு இதெல்லாம்?



சுஜாதா



''விலைவாசி ஏறிக்கிட்டே போவுதே. எப்படிச் சமாளிக்கிறீங்க?''

''சம்பளத்தை மனைவியிடமும், லஞ்சத்தைச் சின்ன வீட்டிலேயும் கொடுப்பேன்!''

— குத்தாலம் அபிதா.

சும்மா இமாஜின் பண்ணிக்காத அம்ரு.''

''இல்லைங்க. நீங்க என்னை வேறு விதமாப் பார்த்தாலும் நான் அதுக்காக வருத்தப்பட மாட்டேன்.''

''அம்ரு கமான், முதல்ல இந்தச் சுய பரிதாபத்தை விடு. நீ எனக்குப் பழைய அம்ருதான். எத்தனை தடவை இதை திருப் பித் திருப்பி சொல்வேன்!''

''அப்பா கூட ஒரு மாதிரி பார்க்கறாங்க.''

''சேச்சே இமாஜினேஷன்.''

''பக்கத்து, எதுத்த வீட்டுக்காரங்கள்ளாம் என்னைப் பார்த்தாக் கதவைச் சார்த்திக் கறாங்க.''

ராம்பிரகாஷ் சிரித்தார்.

''நீங்க சிரிக்கிறீங்க பாத்திங்களா?''

''சே சிரிக்கலை அம்ரு. உனக்கு இந்தச் சூழ்நிலை சரியில்லைன்னா வேற வீடு மாத்திக்கலாம். காம்பஸ்ஸுக்குள்ள போயிர லாம். கோபிகிட்ட சொன்னா ஏற்பாடு பண்ணுவார்.''

''எங்க போனா என்ன? விஷயம் பேப் பர்ல வந்தப்புறம் எப்படி அவங்க நம்மைப் பார்க்கறதைத் தவிர்க்க முடியும்?''

''அப்படினா வேற ஊருக்குப் போயிர லாம். வேற யூனிவர்ஸிட்டிக்கு. இல்லை அமெரிக்காவுக்கு ஸர்ப்பாட்டிக்கல் போக லாம்.. அம்ரு எல்லாம் நம்ம கைல இருக்கு. நம்ம மனசில் இருக்கு. மத்தவங்க இப்படி நினைச்சுப்பாங்க அப்படி நினைச்சுப்பாங் கன்னு அவங்க எண்ணங்களுக்காக நாம அலட்டிக்கிறதில அர்த்தமே இல்லை. உனக்கு யார் முக்கியம்? நான்தானே!''

''ஆமாம்.''

''நான் உன்னை எதாவது சொன் னேனா?''

''இல்லை. ஆனா பார்க்கற பார்வை சரியா இல்லை.''

''எப்படிப் பார்க்கணும்?''

''குற்றம் சாட்டாம பார்க்கணும்.''

''அய்யோ எப்படிப் பார்க்கறதுன்னு தெரியலையே!''

''இதுக்கென்ன சொல்வே கோபி?'' என்றார் ராம்.

பல்கலைக் கழகத்தின் மர நிழல் நிறைந்த பாதையில் மெல்ல நடந்து கொண்டிருந்தார் கள் இருவரும். அங்கங்கே மாணவர்கள் சைக்கிளிலிருந்து இறங்கி மரியாதையாகக் கடந்தார்கள். ஒரு சிலர் திரும்பிப் பார்த்தார் கள். ஸ்டாப் ரூமை நோக்கி நடக்கையில் கோபி ''ராம் இதையெல்லாம் ராஷனலைஸ் பண்ணாதே. டாப்பிக்கை எடுக்காம இருக் கறதே நல்லது.''

''எப்படியாவது வந்துருதே!''

''கொஞ்ச நாள் பிரிஞ்சிருங்களேன்!''

''போக மாட்டா. அவ அப்பா வந்து வருந்திக் கூப்பிட்டார். ம்ஹூம், என்னை விட்டுப் போக மாட்டா.''

''ரெண்டு பேரும் போறது.''

''அதுவும் சரிப்பட்டு வராது. திரும்பத் திரும்ப அந்த டாப்பிக் வரும்னு பயமா இருக்கிறது.''

''ஏதாவது சொல்லி, காட்டி டைவர்ட் பண்ணியே ஆகணும் ராம். விடியோ கிடியோ எதாவது?''

''விடியோவில எது பார்த்தாலும் தவறாம எங்கயாவது ரேப் வந்துருது. உடனே அழ ஆரம்பிச்சுருவா.''

''கார்ட்டூன் படங்கள் எதாவது காட் டேன்.''

''கோபி ஐம் இன் எ ஃபிக்ஸ் ரியலி. எல்லாருக்கும் சைக்காலஜி சொல்லிக் கொடுக்கறேன் எனக்குத் தெரியலையே!''

''ஹிப்னட்டைஸ் பண்ணிப் பாரேன்.''

''எதுக்கு?''

''உள் மனசில என்ன நெனைச்சுக்கிட்டு இருக்காங்க என்ன குறைன்னு.''

''முதல்ல அவகூட டென்ஷன் இல்லாம ரிலாக்ஸ்டா பேச முடிஞ்சாக்கூட நல்லது. இல்லை, சைக்கியாட்ரிஸ்டை பார்க்கலாம். அதைப் பத்தி எதாவது ஆரம்பிச்சாலே எனக்குப் பைத்தியம் பிடிச்சுட்டதா முடிவு கட்டிட்டிங்களான்னு....''

''இல்லை அதை அப்படி ஸஜஸ்ட் பண்ணக் கூடாது ராம். இயல்பா நடக்க ணும். நான் ஏற்பாடு பண்றேன் நிம் ஹான்ஸ்ல ரகுராம் இருக்கார். அவரை ஒரு முறை வீட்டுக்கு அழைச்சுட்டு வர்றேன்.''

எதிர்ப்புறத்தில் சைக்கிளில் சென்று கொண்டிருந்த வர்ஷா இறங்கி ''குட்மார் னிங் ப்ரபஸர்'' என்றாள் சந்தோஷமாக. ''நீங்க காலேஜ் வந்திருக்கறதா க்ளாஸ் மேட்ஸ் சொன்னாங்க.எப்படி இருக்கிங்க?''

''எனக்கு ஒரு ப்ராப்ளமும் இல்லை வர்ஷா. என் மனைவிதான்....''

''இனிமே ரெகுலரா கிளாஸ் எடுப்பீங் களா?''

கோபி, ''அப்பறம் பார்க்கலாம் ராம். எனக்கு வேலை இருக்கு'' என்று கிளம்ப, வர்ஷா அவருடன் நடந்து வந்தாள்.

மலர்கள் இலவசமாக இரைந்து கிடக்க அவள் அருகாமை தன்னைச் சலனப்படுத்தி யதை ப்ரபஸர் உணர்ந்தார். ஏன் இப்படி?

''வர்ஷா க்ளாஸ்ல என்னைப்பத்தி என்ன பேசிக்கிறாங்க?''

''எப்ப வருவார், எப்ப மறுபடி கிளாஸ் எடுப்பார்னுதான்.''

''வேற எதும் பேசிக்கலியா?''

''இல்லையே'' என்றாள் இயல்பாக.

பக்கவாட்டில் அவள் கைகளையும் கழுத்தையும் பார்த்தார். இவள் உன் மாணவிடா!

பென்சிலைக் கடித்துக் கொண்டு, ''அப்பாடா நீங்க க்ளாஸுக்கு வராட்டா நான் தவிச்சுப் போயிருப்பேன் ஸார்.''

''ஏன்?''

''சிலபஸ் முடிக்கவே இல்லையே.''

''வேற யாரும் எடுக்கலை?''

''இல்லை ஸார்! அவள் தலையைச் சாய்த்துப் பார்த்து பதில் சொல்ல, 'இவளுடன் நான் பேசுவதில் இரண்டு வகையிருக்கிறது. வெளியே மேம்போக்காக க்ளாஸ் பற்றிப் பேச்சு.உள்ளுக்குள் மௌனமான ஒரு பேச்சு. இது இரண்டு பேருக்குமே தெரியும்.'

''வர்ஷா க்ளாஸ் விட்டப்புறம் ரூமுக்கு வரியா?''

''வரேன் ஸார்.''

''வேற ஒண்ணுமில்லை, பேப்பர் திருத்தணும். மைசூர் யூனிவர்ஸிட்டி.''

''அதுக்கென்ன ஸார் தாராளமா.''

''கூட பாலாவை வேணா கூட்டிக்கிட்டு வா.''

''வேண்டாம்'' என்று ஒருமுறை அவரை நிமிர்ந்து பார்த்து, ஒன்றுமே அறியாதவள் போலப் புன்னகை செய்தாள்.

**பா**ல்குண்டுவும் பாபுவும் ஆச்ரமத்தருகில் பஸ்ஸிலிருந்து இறங்கிக் கொண்டு





''குடம் சின்னத்தில் நிற்கிற எதிர் கோஷ்டிக்காரங்க ஒவ்வொரு வோட்டுக்கும் தலா ஒரு பிளாஸ்டிக் குடம் கொடுத்திருக்காங்களாம்!''

''அதுக்காக ரோடு ரோலர் சின்னத்தில் நிற்கிற நாம என்னய்யா பண்ண முடியும்?''

— கே. அ. கதிர்வேல்.

பிள்ளையின் தாயார்: ''உங்க பொண்ணு இப்படிக் கரண்டியும் கையுமா வந்து நமஸ்காரம் செய்யறாளே ஏன்?''

பெண்ணின் தாயார்: ''பொண்ணுக்குச் சமைக்கத் தெரியுமான்னு நீங்க என்னைக் கேட்டது அவள் காதில் விழுந்திருக்கும் போல இருக்கு!''

— ரத்தினம்.



நேராக மேலே புல்டெம்பிளை நோக்கி நடந்து ப்ளூகில் ராக் ரோடில் பார்க்கில் போய் உட்கார்ந்தார்கள். எதிரே பெண்கள் காலேஜிலிருந்து மெல்ல மெல்ல கொத்துக் கொத்தாக வரும் மாணவிகளை சுவாரஸ்யமாக பால்குண்டு கவனித்துக் கொண்டிருக்க, பாபு தன் கையையே பார்த்துக் கொண்டிருந்தான்.

''என்னடா காயம்?''

''அதான் அன்னைக்கு கீறிருச்சே!''

''அடுத்தது இதிலே ஒண்ணைத்தாண்டா தேர்ந்தெடுக்கணும்... பாவாடையும் இல்லாம தாவணியும் இல்லாம, குழந்தையும் இல்லாம குமரியும் இல்லாம, விவரம் தெரிஞ்சு தெரியாம.... பாபு ஏண்டா அழுறே?''

பாபு தன் கையைப் பார்த்துக் கொண்டே தோள் குலுங்க அழுதான்.

''ஏண்டா என்னடா?''

''எங்கம்மா எங்கம்மா...''

''திட்டினாங்களா?''

''இல்லை.''

''வேற என்ன?''

''குரு இதை யார்கிட்டயும் சொல்ல மாட்டே தானே?''

''சொல்லு.''

''எங்கம்மா கேரட்டர் சரியில்லை குரு!....''

''பெரியப்பான்னு ஒரு தா..... தினம் அழைச்சுக்கிட்டுப் போயிடறான். ஒவ்வொரு முறையும் பதற்றமா இருக்குது குரு. ஒவ்வொரு முறையும் எனக்கு ஆத்திரமா இருக்குது குரு. ஆனா எங்கம்மா கிட்ட தட்டிக் கேட்க முடியறதில்லை!''

''ஏன்?''

''தைரியமில்லை!''

பால்குண்டு அதைப் பற்றிக் கவலைப்படாமல் மறுபடி சாலையைப் பார்த்தான். ''இத பார்றா, உடுகின்னா இதான்.''

''பொண்ணுங்களே மோசம்.''

''யார்றா சொன்னது?''

''எல்லாரையும் வெட்டிரணும்!''

''முதல்ல தட்டிட்டுப் போலாம். அப்பறம் கட்டிரலாம். அப்பறம் வெட்டிரலாம்.''

''எல்லாப் பொண்ணுங்களும் மோசம்!''

பாபு அந்தப் பெண்களை அக்கறையில்லாமல் பார்த்துக் கொண்டு,

''உங்கம்மா எப்படி குரு?'' என்றான்.

''அவளை நான் பாத்ததே இல்லை மகா. எங்கப்பன் சாவடிச்சுட்டான்.''

''ஒருமுறை கேட்டுறப் போறேன் குரு!''

''கேட்டுரு. அடிச்சுக் கேட்டுரு. ராத்திரி வண்டி எடுக்கறியா?''

''எதுக்கு குரு?''

''ஏன் எதுக்குன்னு என்னைக் கேக்கக் கூடாது. இந்த முறை கபன் பார்க் வேண்டாம். நானக் பவன் இருக்குது. பாரு அங்க....''

(தொடரும்)



# கல்கி கிருஷ்ணமூர்த்தி அறக்கட்டளை

# ஏழை மாணவர்களுக்கு உதவி ரூ. 20,000

சென்ற ஆண்டு இந்த அறக்கட்டளை ஏழை மாணவர்களுக்கு உதவித் தொகையாக மொத்தம் ரூபாய் பத்தாயிரம் விநியோகித்தது. பல கல்லூரி மாணவர்களும் பள்ளி மாணவர்களும் பயனடைந்தனர். இவர்களில் சிலர் ஏழைகள் என்பதோடு உடல் ஊனமுற்றவர்களாகவும் இருப்பது குறிப்பிடத்தக்கது. சில மாணவர்களுக்குத் தகுதிச் சான்றிதழ் வழங்கிய தலைமை ஆசிரியர்களின் கடிதங்கள் இலக்கிய நயத்தோடு அமைந்து மனத்தை உருக்கின. ஒரு தலைமை ஆசிரியர் தமது மாணவனைப் பற்றிக் கவிதையே எழுதி அனுப்பியிருந்தார்! இவ்வாறு இந்தத் திட்டத்துக்கு உற்சாகமான வரவேற்பு இருந்தது.

எனவே, இந்தக் கல்வி ஆண்டில் (88—89) அறங்காவலர்கள் உதவித் தொகையை இரட்டிப்பாக்கி ரூபாய் இருபதாயிரம் விநியோகிக்கத் தீர்மானித்துள்ளனர்.

பத்து கல்லூரி மாணவர்களுக்குத் தலா ரூபாய் 1000 வீதம் அளிக்கப்படும்.

இருபது பள்ளி மாணவர்களுக்குத் தலா ரூ 500 வீதம் கொடுக்கப்படும்.

இவற்றுள் அமரர் கல்கி படித்த மூன்று பள்ளிக் கூடங்களின் மூன்று மாணவர்களுக்கு மூன்று உதவித் தொகைகள் ஒதுக்கப்படுகின்றன. அவையாவன: ஈ. ஆர். உயர்நிலைப் பள்ளி, திருச்சி: தேசியக் கல்லூரி உயர்நிலைப் பள்ளி, திருச்சி: நகராட்சி மேல் நிலைப் பள்ளி, மயிலாடுதுறை.

இவை போக, மீதமுள்ள உதவித் தொகைகளைப் பெற, தமிழகமெங்கும் உள்ள கல்வி நிலையங்களில் படிக்கும் மாணவர்களிடமிருந்து விண்ணப்பங்கள் வரவேற்கப்படுகின்றன.

உதவித் தொகைகளைப் பெற, மாணவர்கள் படிப்பில் சிறந்தவர்களாகவும் அதே சமயம் கல்வியைப் பெற்றோர் உதவியுடன் மட்டும் தொடர முடியாத நிலையில் பொருளாதாரத்தில் பின்தங்கியவர்களாகவும் இருக்க வேண்டும். இந்த இரண்டையும் உறுதிப்படுத்தக் கல்லூரி அல்லது பள்ளி முதல்வரின் சான்றிதழுடன் விண்ணப்பிக்க வேண்டும். சென்ற கல்வி ஆண்டின் இறுதித் தேர்வில் பெற்ற மதிப்பெண்களின் நகலை முதல்வரின் கையொப்பத்துடன் இணைப்பது அவசியம். சென்ற ஆண்டு விண்ணப்பித்தவர்கள் கல்வியைத் தொடர மீண்டும் விண்ணப்பிப்பதில் தடையில்லை. ஆனால் தகுதியின் அடிப்படையில் தான் அவர்களும் பிறருடன் போட்டியிட நேரும்.

வருகின்ற விண்ணப்பங்களை ஆராய்ந்து உதவித் தொகைகளைப் பெறத் தகுதியுள்ள மாணவர்களை அறங்காவலர்கள் தேர்ந்தெடுப்பார்கள். அறங்காவலர்களின் முடிவே இறுதியானது.

விண்ணப்பங்கள் வந்து சேரக் கடைசி தேதி:

**ஜூலை 31, 1988.**

கல்கி கிருஷ்ணமூர்த்தி ஞாபகார்த்த அறக்கட்டளைக்கு நன்கொடைகளும் வரவேற்கப்படுகின்றன. நன்கொடைகளை டிராஃப்ட் அல்லது எம். ஓ. அல்லது செக் மூலம் KALKI KRISHNAMURTHY MEMORIAL TRUST என்ற பெயருக்கு அனுப்பலாம்.

விலாசம்: நெ. 1, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034.

சென்ற ஆண்டு இந்த அறக்கட்டளைக்கு மூலதன நிதியாகப் பல்வேறு அன்பர்கள் மொத்தத்தில் ஒரு லட்சம் ரூபாய் வரை வழங்கியிருக்கிறார்கள். கணக்குகள் தணிக்கை செய்யப்பட்டு, வருமான வரி இலாக்கா அதிகாரிகளிடம் சமர்ப்பிக்கப்பட்டுள்ளன. நன்கொடைகளுக்குச் சென்ற ஆண்டு போல் இந்த ஆண்டும் வருமான வரி விலக்கு அளிக்கக் கோரிக்கையும் சமர்ப்பிக்கப்பட்டிருக்கிறது.

கி. ராஜேந்திரன்,
(ஆசிரியர், கல்கி)
நிர்வாக அறங்காவலர்.



* என். தினதயாளன், அயன்புரம்.

? ஊர்வலங்களுக்கும் அலங்கார வளைவுகளுக்கும், விளம்பரங்களுக்கும் ஏராளமாகச் செலவு செய்து வரும் நமது அரசியல் கட்சிகள் அந்தப் பணத்தை வறுமையில் வாடி வரும் ஏழை — எளியவர்களுக்காகச் செலவிட்டால் என்ன?

! ஏழ்மையை ஒழித்துவிட்டால் கல்வியறிவற்றவர்களுக்குக் கல்வியறிவும் தந்துவிட்டால் அப்புறம் எங்கேயிருந்து கிடைக்கும் வோட்டு? அதனால்தான் மக்களின் வாழ்க்கை வளம்பெறக் கூடிய, மக்களின் அறிவு பெருகக் கூடிய எந்தத் திட்டத்தையும் எந்த அரசியல் கட்சியும் பதவிக்கு வந்த பிறகும் தீவிரமாக நடைமுறைப்படுத்துவதில்லை.

* கு. நாகராஜன், குருசாமிபாளையம்.

? மாநிலங்களுக்கு அதிக அதிகாரம் கொடுக்க மறுக்கும் பிரதமர் ராஜீவ் கலெக்டர்களுக்கு அதிகாரம் குறைவு என்று கூறுகிறார். இது எவ்வகையில் பொருந்தும்?

! கலெக்டர்களுக்கு எத்தனை அதிகாரங்களை வாரி வழங்கினாலும் அதனால் ராஜீவின் அதிகாரங்கள் எதுவும் இம்மியளவு கூடப் பாதிக்கப்படுவதில்லை. ஆனால் மாநிலங்களுக்கு வழங்கப்படும் அதிக அதிகார விஷயம் அப்படிப்பட்டதில்லையே! கடைத் தேங்காயை எடுத்து வழிப் பிள்ளையாருக்கு உடைக்கத் தயாராகிறார், ராஜீவ்!

* பி. ரவிச்சந்திரன், சென்னை — 33.

? எம். பி. சுப்பிரமணியம் சிவாஜி கட்சியை விட்டு விலகி விட்டாரே, இனி ஜெயலலிதாவிடம் போய்ச் சேருவாரா?

! இனியாவது 'சேருமிடம் அறிந்து சேர்' என்னும் மூதுரையை நினைவில் கொண்டு எம். பி. எஸ். செயல்படுவார் என்று கருதுகிறேன். எப்படியோ, மனுஷர் இத்தனை சீக்கிரம் சிவாஜியின் சாயத்தை வெளுக்க வைத்து விட்டாரே!

## அரசு ஊழியர்கள் போராட்டம் பற்றி?

* என். ஆர். செல்வபாண்டியன், புத்தாம்பூர்.

? ஆசிரியர்கள் மற்றும் அரசு ஊழியர்கள் வேலை நிறுத்தம் பற்றி?

! மத்திய அரசு ஊழியர்களின் சம்பளத்தோடு நமது மாநில அரசு ஊழியர்களின் சம்பளத்தை ஒப்பிட்டால் மிகவும் குறைவு தான். அந்த வகையில் தங்கள் சம்பளத்தை அதிகப்படுத்த வேண்டுமென்று இவர்கள் கோரிக்கை வைப்பதும் நியாயமானதே. இந்த நியாயத்தை உணர்ந்துதான் இன்றைய கவர்னர் ஆட்சியும் மாதம் எழுபது ரூபாயை இடைக்கால நிவாரணமாக வழங்கியதோடு, மேற்கொண்டு வழங்குவது பற்றிய விஷயத்தைத் தனிநபர் கமிஷன் மூலம் ஆராய முன் வந்திருக்கிறது. மாநில அரசின் நெருக்கடியான நிதி நிலைமையிலும் இந்த அளவுக்கு அரசு இறங்கி வந்திருப்பது வரவேற்கப்பட

வேண்டிய விஷயம். இந்த நிலையிலும் பிடிவாதமாகப் போராட்டத்தைத் தொடர்வதென்பது நியாயமானதல்ல. விட்டுக் கொடுத்து, மக்களின் நல்லெண்ணத்தைப் பெற்று, சில காலம் பொறுத்து நியாயம் கிட்டவில்லையானால் மீண்டும் போராட்டத்தை அறிவிக்கலாமே? ஒருவேளை ஜனாதிபதி ஆட்சி இருக்கும் போதே காரியத்தைச் சாதித்துக் கொண்டால்தான் உண்டு என்பது தான் பிடிவாதத்துக்குக் காரணமோ?

* செ. பாஸ்கரன், சென்னை — 51.

? கோல்டா மேயர், தாட்சர், அகினோ, இந்திரா காந்தி போன்றோருக்குக் கிடைக்காத 'புரட்சித் தலைவி' பட்டம் ஜெயலலிதாவுக்கு மட்டும் கிடைத்திருப்பது எப்படி?

! அவர்களெல்லாம் காட்டாத சர்வாதிகாரத்தையும் சிறுபிள்ளைத்தனத்தையும் காட்டுபவர் இவர் என்னும் ஒரே காரணம் தான். இல்லையென்றால் கோஷ்டிக்குள் கோஷ்டி இதற்குள் வந்திருக்குமா? இதுவே வரலாறு காணாத புரட்சிதானே!

* தாரை பி. இளங்கோ, தாரமங்கலம்.

? இந்துக்கள் இழுக்க வேண்டிய பழனி முருகன் தங்கத் தேரை சோனியா காந்தி இழுத்தது நியாயமா?

! அப்படிப் பார்த்தால் தந்தை வழியில் ராஜீவ் கூட பார்சி மதத்தைச் சார்ந்தவர் என்றுதான் சொல்ல வேண்டும். தேரை யார் இழுத்தால் என்ன? உண்மையான இறையுணர்வோடு இழுப்பதுதான் முக்கியம். அந்த வகையில் பழனி கோயில் காட்டிய இந்த முன்னுதாரணத்தை மற்ற கோயில்களும் பின்பற்றலாம்.

* ஆர். சுப்பாராவ், திருக்கோவலூர்.

? 'புராண காலத்துச் சாவித்திரி தன் கணவனின் உயிரை மீட்க ஒருமுறைதான் போராடினாள். ஆனால் நான் பலமுறை போராடியிருக்கிறேன்' என்று ஜானகி அரசியல் மேடையில் முழங்கியிருக்கிறாரே? சினிமா உலக அனுபவம் இன்று எப்படியெல்லாம் டயலாக் பேச உதவுகிறது பார்த்தீர்களா?

! ஒரு மனைவி தன் கணவன் உயிருக்காகப் போராடுவதும் அல்லது ஒரு கணவன் தன் மனைவியின் உயிருக்காகப் போராடுவதும் அல்லது இருவருமாகச் சேர்ந்து தங்கள் குழந்தைகளின் உயிருக்காகப் போராடுவதும் இயற்கை. இவையெல்லாம் தேர்தலுக்கு முன் மக்களிடம் சமர்ப்பிக்க வேண்டிய பிரச்னைகளோ அவற்றின் தீர்வுக்கான கொள்கைகளோ, திட்டங்களோ அல்ல. ஒருவேளை அனுதாப வோட்டுச் சம்பாதிக்க உதவலாம். இப்படி அனுதாப வோட்டு சம்பாதிப்பதே அனுதாபத்துக்குரிய விஷயம்தான்.

## நீங்கள் கேட்டவை — தராசு

* கே. அமிர்தம், வேதாரண்யம்.

? சிவாஜி கணேசனுக்கு அரசியல் அனுபவம் இல்லை என்று நடிகை தீபா கூறியுள்ளாரே?

! குயிலைப் பார்த்துக் கறுப்பு என்று காகம் கரைந்த கதைதான்!

* எஸ். சையது ஆரீஃப்.

? 'தமிழக மக்கள் அனைவரும் காங்கிரஸ் மீது நம்பிக்கை வைக்கட்டும், பிறகு தேர்தலை வைத்துக் கொள்வோம்' என்று அருணாசலம் கூறுகிறாரே?

! அலை ஓயட்டும், அப்புறம் சமுத்திர ஸ்நானம் பண்ணலாம் என்று பார்க்கிறார். மக்கள் இவரை முங்கி எடுத்து விடுவார்கள்!

* சர்புதீன் பரிதா, திருமயம்.

? இந்தியா, பாகிஸ்தான், போன்ற ஏழை நாடுகள் மக்களின் வரிப்பணத்தில் கணிசமான பகுதியைப் போருக்கான ஆயுத தளவாடங்களில் செலவழித்துக் கொண்டிருப்பது புத்திசாலித்தனமாகுமா?

! யுத்த தளவாடங்களுக்குச் செலவிடப்படும் தொகை, அபிவிருத்திப் பணிகளுக்குச் செலவானால் தேசம் மிக வேகமாக முன்னேறும் என்பதற்குத் தென்கொரியா, மேற்கு ஜெர்மனி, ஜப்பான் போன்ற நாடுகள் உதாரணம். அமெரிக்கப் பாதுகாப்பினை இவை ஏற்றன. தங்கள் சுதந்திரத்தையும் தன்மானத்தையும் இதனால் இழக்க வேண்டியதில்லை என்பதையும் இவை நிரூபித்துள்ளன. நாம் அவ்வாறு செய்ய முடியாமல் நேருஜியின் அணி சேராக் கொள்கை தடுக்கிறது. இந்நிலையில் அண்டை நாடுகளுடன் நட்புறவை வளர்த்துக் கொண்டு கூட்டு முயற்சியில் படை பலம், ஆயுத பலம் ஆகியவற்றைக் குறைப்பதே வழி.

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

எஸ். எஸ். என். சர்புதீன் பரிதா,
6 — 5, சந்தைப்பேட்டை,
முஸ்லிம் தெரு, திருமயம் — 622 507
புதுக்கோட்டை (மா. வ.).

**இவர்தான் முதல்வர்:**

# கட்சிகளுக்கு அப்பால்...

ஜனதா கட்சி தலைவர்களுள் 'சோ' இராமசாமி முதல் மதிப்பெண் பெறுகிறார். அவர் சார்ந்திருக்கும் ஜனதா கட்சி அவரை நன்முறையில் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்பது எனது விருப்பம்.

'சோ' இராமசாமியின் நேர்மையும், அறிவுக் கூர்மையும் அனைவரும் அறிந்தது. நல்ல சட்ட ஞானமும், அரசியல் ஞானமும், அரசியல் அமைப்புப் பற்றிய நல்லறிவும் கொண்டவர். அஞ்சா நெஞ்சர்.

மக்களுக்கு இரு வேண்டுகோள்கள் 1. ''ஜெயிப்பவருக்குத்தான் ஓட்டு'' என்ற செம்மறியாட்டுப் பண்பை மாற்றிக் கொண்டு ''ஜெயிக்க வேண்டியவருக்குத் தான் ஓட்டு'' என்ற எண்ணம் நமக்கு வர வேண்டும்.

2. நாம் எல்லோரும் கண்டிப்பாக வாக்களிக்க வேண்டும். ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு: ''மோசமான ஆட்சியாளர்கள் நல்லவர்களா ல் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள், — அவர்கள் வாக்களிக்காத காரணத்தால்.''

— இ. க. பாலசுப்பிரமணியன், ஜெயங்கொண்டம் — 621 802.





தமிழ் நாட்டிற்கு வரப் போகும் முதல்வர் பொருளாதாரத்தில் நிபுணராகவும் மிகவும் உயர்ந்த கல்வி உள்ளவராகவும் கறைபட்டவர் அல்லர் என மக்களிடம் மதிப்புப் பெற்றவராகவும் விருப்பு, வெறுப்பு, பாசம் போன்ற குணங்களுக்குத் தம்மை அடிமைப்படுத்திக் கொள்ளாதவராகவும் இருத்தல் வேண்டும்.

மேற்கூறிய பல அம்சங்களும் பொருந்தியவர் முன்னாள் சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் டாக்டர் மால்கம் ஆதிசேஷையா. எனவே அவர் தமிழ் நாட்டிற்கு முதல்வராக ஆக வேண்டும்.

பொருளாதாரத்தில் நிபுணர், கல்வியில் வல்லுநர். யு னஸ்கோவில் பல ஆண்டுகள் பணிபுரிந்து இந்தியாவில் பல பொறியியல் கல்லூரிகள் தோன்றக் காரணமாயிருந்தவர். சிறு வயதிலேயே சென்னை கிறித்துவக் கல்லூரியில் பொருளாதாரத் துறையில் தலைமைப் பதவி வகித்தவர். மதத்தால் கிறித்தவர். எம் மதமும் சம்மதம் என்ற மனப்பான்மை கொண்டவர்.

தமிழ்க மக்கள் மால்கம் ஆதிசேஷையாவையே முதல்வர் எனத் தீர்மானித்தால் தமிழ் நாட்டில் தொழில்கள் பெருகும். வேலை வாய்ப்புக்கள் அதிகரிக்கும். வறுமை நீங்கும்.

— ஆ. ப. லோகநாதன், பிம்ப்ரி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—: வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—: விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—: வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—: விமானத் தபால் ரூ. 340/—.




# "ஊ" "ஆ" "ஔச்" இவ் வேதனைக் குரல்கள் வேண்டாமே!

சுளுக்கு, தசை பிடிப்பு. மூட்டு நோவு ஆகியன போலவே, பொதுவான உடல், முதுகு வலிகளும் துன்பந்தரும். அதற்குக் கவனம் தேவை.

எனவே, கைவசம் அயொடெக்ஸ் இருப்பது நல்லது.

அயொடெக்ஸ் வலியாற்றுவதோடு, திசுக்களின் பாதிப்பைக் குணப்படுத்துகிறது.

இருமுறை அயொடெக்ஸ் தினம் தடவ,
இரு மடங்கு குணம் கிடைக்கும்.
''ஊ'' ''ஆ'' ''ஔச்'' என்ற வேதனைக் குரல்களை விரட்டி, மீண்டும் செயல்பட,
அயொடெக்ஸ் தேவை.




**போடுவீர்**
**அயொடெக்ஸ்®**
**புறப்படுவீர் ஓடியாட.**

HTA 1711

SKF—

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka




# பிறந்த நாள் இன்று... அரும்பெரும் பரிசு ஒன்றை மீனுவுக்கு அளித்துவிட்டது ஃபேர் அண்ட் லவ்லி.

இந்த நாளுக்காகவே மீனா அரு முயற்சி எடுத்திருக்கிறாள். இரு மாத முன்னேற்பாடுகள் — அதில் முக்கியமானது ஃபேர் அண்ட் லவ்லி ஒத்துழைத்த மகிமை, அவள் மேனிமீது வெண்ணிலவைப் பொழிந்துள்ளது இதமாக, இயல்பாக. பரிசுப் பெட்டகத்தை அவளிடம் நீட்டும் ரவி, பால்நிலா முகத்தழகை பருகுகிறான் சக்கரவாகப் பறவை போல். அதை வாங்கும் மீனாவின் இதயம் பாடுகிறது நன்றிக் கீதம் — ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமுக்கு!

மீனாவைப் போலவே நீங்களும், கவனிக்கத் தக்க சிகப்பழகை அடைந்திட முடியும் ஃபேர் அண்ட் லவ்லி துணையோடு.

**ஒரு முக்கிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு...**

ஃபேர் அண்ட் லவ்லி, இயல்பாக உங்களை சிகப்பழகியாக்க இதிலுள்ள ஒப்பற்ற ஃபார்முலா — இரு முக்கிய வழிகளில் வேலை செய்கிறது. ஒன்று : சருமத்தின் அடியாழத்தில் செயல்பட்டு, உடல்



ஃபேர் அண்ட் லவ்லி துவங்குமுன்



ஃபேர் அண்ட் லவ்லி உபயோகிக்கும் நாட்களில்



கறுக்கும் உள்விளைவைத் தடுக்கிறது — வேறெந்த க்ரீமுக்கும் இது இயலாத சாதனை.

மற்றொன்று : இதிலுள்ள இரட்டை ஸன்ஸ்க்ரீன் ஆற்றல், உடல்கறுக்க வைக்கும் சூரிய ஒளியை உட்புகாதபடி தடுத்து நிறம் காத்திடுகிறது. ஆகவே 6 முதல் 8 வாரங்களில் புதிதாக மேலெழும்பும் கொழுந்துச் சருமப் படலங்களில் செவ்வையான சாயல் மிளிரும். அன்றாடம் இருமுறை ஃபேர் அண்ட் லவ்லி — நாள் தவறாமல் உபயோகித்து வந்தால், மென்மை கொஞ்சும் இயல்பான சிகப்பழகு உறுதியாக உமதாகி விடும்.

**உபயோக முறை :**

கழுவிக் கொண்ட முகம், கழுத்து, கரங்கள் மீது ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமை பொட்டுப் பொட்டாக இட்ட பின், மேல் நோக்கித் தேய்க்க வேண்டும் மெதுவாக. ஃபேர் அண்ட் லவ்லி, செயல்படத் துவங்கும் போது சற்றே கூசும் உணர்வு ஏற்படுமானால் கவலை வேண்டாம், விரைவில் அது மறைந்துவிடும்.

எளிதில் உள் உறிஞ்சப்படும் குழைவு குணமோங்கி முன்னிலும் மென்மையாக வருகிறது ஃபேர் அண்ட் லவ்லி, ஒரே சீராகப் பரவுகிறது சருமத்தில் மேலும் எளிதில் உறிஞ்சப் படுகிறது.

உடலார உணருவீர் இம் மாறுதலை...பிறகு காண்பீர் கண்ணார.

ஃபேர் அண்ட் லவ்லி பற்றி மேலும் கேட்டறிய விரும்பினீரானால் எழுதுங்கள் இம் முகவரிக்கு :
திருமதி கவிதா குமார், ஃபேர் அண்ட் லவ்லி அட்வைசர், பி.ஓ. பாக்ஸ் 758, பம்பாய்-400 021.

**ஃபேர் அண்ட் லவ்லி**
சிகப்பழகு க்ரீம்




## கண்காணும் சிகப்பழகை உமதாக்கும்... இயற்கைக்கே உரிய இதமான வழியில்